# பொருளடக்கம்

# சமர்க்கள நாயகன்

உறங்கு நிலையில் இருந்த தமிழ் வீரத்தைத் தட்டி எழுப்பிச் செயற்பட வைத்த வரலாற்றுச் சிறப்பு தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைவர் மேதகு வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்களுக்கு உண்டு. தமிழினத்தின் வீரமரபு அவர் தலைமையில் புத்துயிர் பெற்றுள்ளது. இது பற்றி பிரபாகரன் அவர்கள் கூறியதாவது, 'தமிழர் வரலாற்றில் என்றோ மாண்டுபோன வீரமரபு மீண்டும் மறுபிறப்பு எடுத்தது. அடிமைத்தனத்தின் அமைதியைக் குலைத்துக் கொண்டு ஒரு புயல் எழுந்தது. சருகாக நெரிபட்ட தமிழன் மலையாக எழுந்து நிமிர்ந்தான். அடிமை விலங்குகளால் பிணைக்கப்பட்டு நீண்ட நெடுங்காலமாகத் தூங்கிக் கொண்டிருந்த தமிழர் தேசம் விழித்துக் கொண்டது.' போர்க்குணம் மிக்க ஒரு விடுதலை பெற்ற புரட்சிகர சமுதாயத்தை உருவாக்கும் முதற்கட்டமாக அவர் தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்பை உருவாக்கினார். படிப்படியாக அவருடைய வேணவா நிறைவேறி வருகிறது.

அவருடைய தலைமையில் எண்ணரும் வீரர்கள் முப்படையாக அணிவகுத்து நிற்கிறார்கள். அவர் தெரிவுசெய்து உருவேற்றிப் பயிற்சி வழங்கிய தளபதிகள் அணிகளுக்குப் பொறுப்பாக உள்ளனர். களத்தில் நாம் பெறும் வெற்றிகள் அவருடையதே. பால்ராஜ் என்ற களப்பெயர் பூண்ட கந்தையா பாலசேகரன் முல்லையின் கொக்குத்தொடுவாயில் பிறந்தவர். சிங்கள தேசத்தில் எக்கட்சி ஆட்சிக்கு வந்தாலும் வெப்ப வலய மேம்பாடு என்ற போர்வையில் தமிழர் மண்ணில் சிங்களக் குடியேற்றம் செய்வது நெடுநாள் வழமை. பரம்பரையாகக் குடியிருந்த பூமியிலிருந்து தமிழ் மக்களை விரட்டிக் குடிபெயரச் செய்வதற்காகச் சிங்கள இராணுவம் பயன்படுத்தப்படுகிறது. தமிழர் தம் இதயபூமி மணலாறில் நடக்கும் சிங்களக் குடியேற்றத்தின் பயனாய் 1980-களில் வெளியேற்றப்பட்ட பல தமிழ்க் குடும்பங்களில் பால்ராஜின் குடும்பமும் அடங்கும்.

இந்தப் பின்னணியும் சிங்களவனின் வன்கொடுமைகளால் ஏற்பட்ட வன்மமும், பசீலன் என்ற புலி மாவீரனின் நெருக்கமும், தேசியத் தலைவர் பிரபாகரன் அவர்களின் வழிகாட்டலும் பால்ராஜை மாபெரும் வீரனாக்கின. உயர்தரப் பரீட்சையில் எய்திய கல்வித் தகைமையும், வன்னிக் காடுகள் பற்றிய நுட்பமான அறிவும், இயல்பாக அமைந்த நிலைகுலையாத துணிச்சலும் அவரைச் சிறந்த புலிப் போராளியாக உருவாக்கின. 1984 தொடக்கம் 24 ஆண்டு காலம் அவர் போராட்ட வாழ்வை மேற்கொண்டார். அடங்காமண் எனப்படும் வன்னியின் மைந்தனான பால்ராஜ் களம் பல கண்டவர், சாவைப் பலமுறை சந்தித்தவர், முன்னின்று படை நடத்தியவர், மானமறவன் என்ற அடைமொழிக்குரியவர். அவர் வாழ்ந்த அர்த்தமுள்ள வாழ்வும் அவர் நிலை நாட்டிய இமாலயச் சாதனைகளும் பிரிகேடியர் என்ற படைய விருதை அவருடைய வீரச்சாவின் பின் பெற்றுக் கொடுத்துள்ளன. உயிர் வாழும் காலத்தில் அவர் வன்னி மாவட்டத் தளபதியாகவும் கேணல் நிலை பெற்றவராகவும் திகழ்ந்தார்.

கரந்தடிப் படையினனாகப் பால்ராஜ் நடத்திய தாக்குதல்கள் பலவாகும். அவர் களமாடிய பெருஞ்சமர்கள் நிறைய உண்டு. சிங்களப்படை, இந்தியப்படை ஆகியவற்றுடன் அவர் பொருதியிருக்கிறார். வன்னி விக்கிரம 02, 03, ஆ.க.வெ. சமர், பலவேகய 03, மின்னல், யாழ்தேவி, ஜெயசிக்குறு, ஓயாத அலை 01,02,03, என்பனவற்றில் அவர் முக்கிய பங்கு வகித்தார். 1991 ஏப்பிரல் 10 ஆம் நாள் புலிகளின் முதலாவது மரபுவழிப் படையணி சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவு உருவாக்கப்பட்டது. அதன் முதலாவது தளபதியாக பால்ராஜ் அமர்த்தப்பட்டார். பெயர் பெற்ற படையணிகளுக்குத் தனித்துவமான குணாம்சங்களும் மரபுகளும் இருக்கின்றன. கருவிலே அவை உருவாகின்றன, அவை அணிகளின் குறியீடாக அமைகின்றன. சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணிக்கு ஏற்றமும் இறுமாப்பும் கொடுத்தவர் பால்ராஜ். படையணிகளின் வீரமரபைப் பிரெஞ்சு மொழியில் எஸ்பிறே டி கோல் என்பார்கள். இயலாத ஒன்று இருக்காது எமக்கு என்ற இலச்சினைச் சொற்களுடன் சாள்ஸ் அன்ரனி நிமிர்ந்து நிற்கிறது.

பால்ராஜின் சாதனைச் சிகரமாக இத்தாவில் பெட்டிச்சமர் அமைகிறது. நான்கு நூற்றாண்டுகளுக்கு மேலாக அந்நியர் கைப்பட்டிருந்த ஆனையிறவுப் படைத்தளம் மீண்டும் தமிழர் வசமாவதற்கு பால்ராஜின் சாதனை அடித்தளமாக அமைகிறது. இந்தப் பணிக்குரியவன் இவன்தான் எனத் தீர்மானித்த தலைவர் பிரபாகரன் அவர்கள் சிங்களப் படையினரின் வழங்கல் பாதையைக் குறுக்கறுத்து நிறுத்தும் பொறுப்பை பால்ராஜிடம் ஒப்படைத்தார். ஆனையிறவுப் போர் இத்தாவிலில் நடந்ததாகச் சொல்வார்கள். குறைந்த எண்ணிக்கையிலான வீரம் செறிந்த ஆண், பெண் போராளிகளுடன் நிலையெடுத்த பால்ராஜ் சிங்களப் படைகளின் முழுப் படைப்பலத்தையும் எதிர்த்து நின்றார். புறப்பொருள் வெண்பா மாலையில் தமிழ் வீரத்தின் அங்கமான எருமை மறம் பாடல் பெற்றுள்ளது. பகைவர் அலைபோல் வரும்போது கைவேலுடன் நின்று களமாடி எருமை மறம் காத்தான் என்பது வரலாறு. முன்வைத்த காலை பின் வையாது போராடி வெற்றி கண்ட பால்ராஜைப் பாடிப்பரவுவது எமது கடனே.

உலகின் முன்னணி இராணுவக் கல்லூரிகளிலும் பயிலகங்களிலும் ஆனையிறவுப் பெரும் போர் பற்றியும் இத்தாவில் பெட்டிச்சமர் பற்றியும் கற்கையும் ஆய்வும் மேற்கொள்ளப்படுகின்றன. ஏன் என்று சற்று விரிவாகப் பார்ப்போம். ஆனையிறவு முகாமைத் தொடும் மூன்று முக்கிய பாதைகள் இருக்கின்றன. அவையாவன வெற்றிலைக்கேணிப் பாதை, ஏ9 எனப்படும் கண்டி வீதி நெடுஞ்சாலை, கடல் நீரேரியை அண்டிய பழைய பாதை. புலிப்படை எவ்வாறு இத்தாவில் வரையில் நகர்வை மேற்கொண்டது என்பதைப் பார்ப்போம். வெற்றிலைக்கேணி கட்டைக்காட்டிலிருந்து கடல் வழியாகப் புகுந்தார்கள். அங்கிருந்த சிங்களக் கடற்படையை அழித்தார்கள். பின்பு மாமுனையில் புலிப்படையினர் தரையிறங்கினார்கள். அங்கிருந்த சிங்களப் படைத்தளத்தை அழித்தார்கள். பின்பு மேற்காக நகர்ந்து கண்டற்காட்டுப் பகுதியை ஊடறுத்து இத்தாவில் - முகமாலைப் பகுதியில் கண்டி வீதியைக் கைப்பற்றி அங்கு நிலையெடுத்து நின்றனர். இயற்கை அரணற்ற அந்தப் பகுதியில் அமெரிக்கப் பயிற்சி பெற்ற 53ஆம் டிவிசனின் தாக்குதல்களையும் சமாளித்தபடி கண்டி வீதியை வெட்டித் துண்டாடினர். இதுதான் பால்ராஜின் அசுர சாதனை. சீரான வழங்கல் இல்லை, உதவிக்கு வர வசதியில்லை, துணிவே துணையாக நின்று களமாடியதை உலக இராணுவ வல்லுநர்கள் ஆழ்ந்த வியப்புடன் நோக்குகிறார்கள்.



இரண்டாம் உலகப் போரின் பின்னர் மூன்றாம் உலகில் நடந்த தேசிய விடுதலைப் போர்களில் பால்ராஜின் தலைமையில் நடந்த படை நடவடிக்கை தனித்துவமானது. ஆனையிறவின் வீழ்ச்சிக்கு அடிகோலிய தலைவர் பிரபாகரன் அவர்களின் திட்டமிடலும் பால்ராஜ் அவற்றை நடைமுறைப்படுத்திய திறனும் வேறெங்கனும் காணமுடியாத தனிப்பெரும் நிகழ்ச்சியாகும். உலக வரலாற்றில் எங்கும் எப்பொழுதும் நடவாத அற்புதமான நிகழ்ச்சிகள் எமது தாயக மண்ணில் நடக்கின்றன. அற்புதமான தியாகங்களும் அதிசயமான அர்ப்பணிப்புகளும் நடந்த வண்ணம் உள்ளன.

பால்ராஜ் சாகவில்லை, அவர் எங்களோடுதான் இருக்கின்றார். ஒரு விடுதலை வீரனின் சாவு ஒரு சாதாரண மரண நிகழ்வு அல்லவென்று எமது தேசியத் தலைவர் பிரபாகரன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அந்தச் சாவு ஒரு சரித்திர நிகழ்வு, ஒரு உன்னதமான இலட்சியம் உயிர் பெறும் அற்புதமான நிகழ்வு. மேலும் அவர் கூறுகையில் உண்மையில் ஒரு விடுதலை வீரன் சாவதில்லை, அவனது உயிராக இயங்கி வந்த இலட்சிய நெருப்பு என்றுமே அணைந்து விடுவதில்லை. இந்த இலட்சிய நெருப்பு ஒரு வரலாற்றுச் சக்தியாக மற்றவர்களைப் பற்றிக் கொள்கிறது.

**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**

**வெளியீட்டுப் பிரிவு,**
**அனைத்துலகத்** தொடர்பகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள், தமிழீழம்.




# தமிழீழ விடுதலைப் புலிகள்
## LiberationTigers of Tamil Eelam

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
மே. 21. 2008.

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

விடுதலைக்கான நீண்ட பயணத்திலே எமது சுதந்திர இயக்கம் எத்தனையோ அற்புதமான தியாகங்களைப் புரிந்திருக்கிறது. எத்தனையோ வீரகாவியங்களைப் படைத்திருக்கிறது. எண்ணற்ற சாதனைகளை நிகழ்த்தியிருக்கிறது. மகத்தான இராணுவ வெற்றிகளைக் குவித்திருக்கிறது. இந்த இமாலய வெற்றிகள் பலவற்றுக்கு நடுநாயகமாக நின்று, எமது சண்டையணிகளையும் மரபுப் படையணிகளையும் வழிப்படுத்தி, நெறிப்படுத்திச் சமராடிய எமது வீரத்தளபதி இன்று எம்முடன் இல்லை. இவரது இழப்பால் எமது தேசம் ஆற்றமுடியாத துயரத்திலும் ஆழ்ந்த வேதனையிலும் இன்று மூழ்கிக்கிடக்கிறது.

பொதுவாகவே, விடுதலை இலட்சியத்தில் பிடிப்பு ஏற்பட்டு விட்டால், எமக்கு துன்ப துயரங்கள் தெரிவதில்லை; வேதனைகள் புரிவதில்லை; உடல் உபாதைகள் அழுத்துவதில்லை; இயற்கை கூடக் குறுக்கே நிற்பதில்லை. எனது அன்புத் தளபதி பிரிகேடியர் பால்ராஜுக்கும் அப்படித்தான். ஓயாது குமுறும் சமர்க்களங்களையெல்லாம் அவன் ஓய்வில்லாது, உறக்கமில்லாது எதிர்கொண்டான். அங்கு இரவு, பகல் பாராது செயற்பட்டான். கொட்டும் மழையும் கோடையின் கொழுத்தும் வெய்யிலும் அவனைக் கட்டிப்போட்டது கிடையாது. கொடிய சண்டைக் களங்களில் எல்லாம் எத்தனையோ துன்பங்களைச் சுமந்தவாறு, எத்தனையோ நெருக்கடிகளைச் சமாளித்தவாறு, எத்தனையோ ஆபத்துக்களை எதிர்கொண்டவாறு அபாரமான மனவுறுதியோடு போராடினான்.

தலைசிறந்த போர்த்தளபதி என்ற வகையில் நான் அவனை ஆழமாக நேசித்தேன். அவன் மீது அளவுகடந்த அன்பும் பாசமும் கொண்டிருந்தேன். அவன் அறிமுகமாகிய நாளிலிருந்து அவனுள் அபூர்வ போர்ப்பண்புகளும் போர்க்குணங்களும் இயற்கையாகவே நிறைந்து கிடப்பதைக் கண்டுகொண்டேன். ஆற்றல் மிக்க, ஆளுமை மிக்க இலட்சியப் போராளியாக அவனை வளர்த்தெடுத்தேன். அபாரமான துணிவும், அசுர வேகமும், சிறந்த தாக்குதல் உத்திகளும், நேர்த்தியாகப் படை நகர்த்தும் ஆற்றலும், கூட்டுக்குலையாத குறிதவறாத செயற்பாடுகளுமாக அவன் வெளிப்படுத்திய போர்ப்பண்புகள் எமது எதிரிக்கு அச்சத்தைக் கொடுத்தன. அதேநேரம் எமது போராளிகளின் மனோதிடத்தையும் இலட்சிய உறுதிகளையும் மேலும் உரமாக்கின. எமது மக்களுக்கு பெரும் வெற்றிகளைத் தேடித்தந்தன. பிரிகேடியர் பால்ராஜ் எம்மைவிட்டு எங்கும் போய்விடவில்லை. எமது தேசத்தின் சுதந்திர மூச்சாக, எம்மையெல்லாம் உள்ளிருந்து இயக்குகின்ற இலட்சிய நெருப்பாக அவன் என்றும் எம்முள் எரிந்துகொண்டிருப்பான்.

'புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்'

வே. பிரபாகரன்
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்.




# அனைத்துலகத் தொடர்பகம்
# தமிழீழ விடுதலைப் புலிகள்

தமிழீழம்

# வீரவணக்கம்

## களநாயகன் பிரிகேடியர் பால்ராஜ்

எமது தலைவனின் எண்ணக்கருத்தைச் செயல் வடிவமாக்கி; சமர் வெற்றிகள் ஒவ்வொன்றிலும் வீரமுழக்கமிட்ட பிரிகேடியர் பால்ராஜ் ஒரு அற்புதமான போர்த்தளபதி. எளிமை, யாவரையும் மதிக்கும் பண்பு, போராளிகள் ஒவ்வொருவருக்கும் உயிர்த்தோழனாக, கடமையில் கண்துஞ்சா வீரப்பெருமகனாக, நினைத்ததை முடிக்கும் செயல் வீரனாக, இந்த மண்ணின் விடிவிற்காக இரவு பகல் பாராது இருபத்தி நான்கு வருடமாக உழைத்த எங்கள் வீரத்தளபதி நோயினால் வீழ்ந்தபோது நாம் மட்டுமல்ல, உலகத்தமிழினமே சோகத்தில் ஆழ்ந்தது.

எந்த இறுக்கமான சமர்க்களத்தையும் தனது வீர ஆளுமையினால் வெற்றியின் பக்கம் திருப்பி, தலைவன் திட்டத்தை செவ்வனவே முடித்து வைக்கின்ற ஒரு கள ஆசானாக, பட்டறிவாளனாக, போராளிகள் ஒவ்வொருவருக்கும் தலைவனின் கருத்தையூட்டி அவ்வீரர்கள் ஒவ்வொருவரையும் சிறந்த வீரனாக உருவாக்கிய பெருமை இப்பெரும் தளபதியையே சாரும். இவ்வீரத்தளபதியின் குரல் கேட்டால் எதிரிக்கு நடுக்கம் வரும். போராளிகளுடன் கதைத்தால் ஒன்று பத்தாக, பத்து நூறாக வீரர்கள் பலம் பெறுவார்கள். அந்த அளவுக்கு ஒரு செயல் வீரனாக வாழ்ந்த ஒரு வீரத்தளபதியை நாம் இன்று இழந்துவிட்டோம்.



இக்களநாயகன் தனது வாழ்நாள் முழுவதையும் சமர்க்களங்களிலேயே கழித்தார். இந்த மண்ணும் மக்களும் விடுதலை பெற வேண்டும், எமது மக்கள் சந்தோசமாக தங்கள் மண்ணில் வாழவேண்டும் என நிதமும் அதற்காகவே அவர் செயற்பட்டுக் கொண்டிருப்பார். தலைவனின் காலடி மண்ணுக்கே யாரையும் விலைபேச விடமாட்டோம், எங்களை யார் எதிர்த்தாலும் இந்த மண்ணில்தான் அவர்களுக்கு புதைகுழி என வீரசபதமிட்டு களம் நடாத்தி வெற்றிவாகை சூடிவந்த எங்கள் தளபதி புலம்பெயர் வாழ் மக்களோடு, அன்புடன் உறவாடி அவர்களின் தாயகப் பசியை, உறவுப் பிரிவை அறிந்து, கவலைப்படாதீர்கள் எங்கள் தலைவனும் நாங்களும் இருக்கின்றோம்; நிச்சயம் உங்களுக்குத் தமிழீழத்தைப் பெற்றுத்தருவோம்; நீங்கள் இங்கு வந்து மகிழ்ச்சியாக வாழுங்கள் என ஆறுதல் கூறி வழியனுப்பியவர் இன்று எம்மோடு இல்லைத்தான். ஆனால், அவர் கூறிய கூற்றும் விடுதலைக்காக அவர் வாழ்ந்த வாழ்வும் வரலாறாக எம்முன் விரிந்து கிடக்கிறது.

அவரின் இழப்பு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். ஆனால், கண்ணீர் சிந்தி, கதறியழுது இவ்வீரத்தளபதியின் கல்லறையை நனைப்பதன் மூலம் அவரின் இழப்பை ஈடுசெய்ய முடியுமா? எம் அனைவருக்காகவும் தமிழீழத்தைப் பெற்றுத் தருவதற்காகத் தனது நோயையும் பொருட்படுத்தாது களத்திலே சமராடித் தமிழீழக் கனவோடு வீழ்ந்த இவ்வீரத்தளபதிக்கு உண்மை வீரனுக்கு - புலம்பெயர் வாழ் தமிழ் மக்களாகிய நீங்களும், தமிழீழத் தாயகம் வாழ் தமிழர்களாகிய நாமும் ஒன்றிணைந்து, அவனது சுதந்திரக் கனவை நனவாக்கிக் கொடுப்பது ஒன்றுதான் உண்மையான அஞ்சலியாகும். ஆகவே, நாம் எல்லோரும் அதற்காக உழைப்போம்; விடுதலை வேண்டி வீறுநடை போட்ட இவ்வீரச்சிகரத்துக்கு எங்கள் வீரவணக்கத்தைச் செலுத்திக் கொண்டு தமிழீழத்திற்காக அயராது போராடுவோம்.

**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**





# ஈழத்தமிழர்களின் விடுதலை வரலாற்றில் பால்ராஜிற்குரிய சரித்திரம் மூடப்படவேமாட்டாது

- புலனாய்வுத்துறைப் பொறுப்பாளர் ச. பொட்டு -

**புதுக்குடியிருப்பில் இடம்பெற்ற பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் வீரவணக்க நிகழ்வில் புலனாய்வுத்துறைப் பொறுப்பாளர் ச. பொட்டு அவர்கள் நிகழ்த்திய உரை.**



தமிழர்களுடைய விடுதலை வரலாற்றில் பால்ராஜிற்குரிய சரித்திரம் மூடப்படவேமாட்டாது. அவர் எங்கள் எல்லோருடனும் வாழ்வார். தமிழீழ விடுதலை வரலாறு ஒரு வெற்றிகரமான போரியல் வெற்றி நாயகனை உருவாக்கி இருந்தது என்று பெருமைப்படலாம்.



பிரிகேடியர் பால்ராஜ் அவர்களுடைய பிரிவு அல்லது இழப்பு தமிழீழ விடுதலை வரலாற்றில் ஒரு மிகப் பெரிய இழப்பாக இருக்கும். ஆனாலும் அந்த வரலாற்று வெற்றிடம் ஏற்பட்டுவிடாமல் இருப்பதற்காகவே அவர் தனது இரு தசாப்தகால போராட்ட வாழ்க்கையை முன்னெடுத்திருந்தார். அதாவது இந்த விடுதலைப் போராட்டம் ஒரு இராணுவ ரீதியான வடிவம் பெற்றதில் இன்று அதிகாரிகளாக அல்லது படைத் தளபதிகளாக தமிழீழ விடுதலை வரலாற்றை முன்நகர்த்திக்கொண்டிருக்கும் போரியல் தளபதிகளை உருவாக்குவதில் அவர் தனது இருபது வருடகாலத்துக்கு மேற்பட்ட போராட்ட வாழ்க்கையில் முழுமையாக உழைத்தார்.

இங்கு முன்னர் உரையாற்றிய ஒரு மாணவன் கூறினார், பால்ராஜ் அவர்கள் போராட்டத்தில் இணைந்ததற்கு நான்கு வருடங்களுக்குப் பின்னர்தான் தான் பூமியில் பிறந்ததாக, ஒரு நீண்டகாலப் போரியல் வரலாற்றில் ஒரு அடையாளமாக அந்தச் சொல்லை நான் பார்க்கிறேன். அவருடைய கூற்றை நான் பார்க்கிறேன்.

அவருக்காக இருக்கட்டும், அவருடைய சந்ததிக்காக இருக்கட்டும் அல்லது எமது நாளைய சந்ததிகளுக்காக இருக்கட்டும் தமிழர்களின் வீரத்துக்கு ஒரு எடுத்துக்காட்டாக எழுச்சிச் சின்னமாக பால்ராஜ் அவர்கள் இருப்பார்.

எல்லாத் தளபதிகளும் இருந்தார்கள். இந்த விடுதலைப்போராட்டத்தில் எவ்வளவோ மாவீரர்கள் வந்தார்கள். இன்று இருபதினாயிரம் மாவீரர்களைக் கடந்தும் இந்த விடுதலைப் போராட்டம் நடக்கின்றது. அந்த இருபதினாயிரம் பேரை விட, பால்ராஜ் எதுவாக மாறி நிற்கின்றார். எதனால் வித்தியாசப்படுகின்றார் என்ற கேள்வி எழும்.

பால்ராஜ் ஒரு சிறந்த போர்த் தளபதியாக விளங்கினார். போர்த்தளபதிகள் இந்தப் போராட்டத்தில் வரவில்லையா, இன்றும் போர்த்தளபதிகள் பூமியில் இல்லையா அல்லது எமது விடுதலைப் போராட்டத்தில் இல்லையா என்ற கேள்வி வரும். அவர்கள் எல்லாரையும் விட பால்ராஜ் எதனால் வித்தியாசப்பட்டார். என்ற கேள்வி வரும். இங்கு நாம் ஒன்றை எண்ணவேண்டும், எமது விடுதலை இராணுவமானது எமது விடுதலை இயக்கமானது படையணியாக இருந்தாலும் கூட நாம் ஓர் மரபுவழிப் படையணிக்குரிய வளங்களைக் கொண்டவர்கள் அல்ல. ஆளணி ரீதியாகவும் சரி, ஆயுத ரீதியாகவும் சரி பலவீனமான ஒரு இனத்தின் பிரதிநிதிகள், அவர்களுக்கு இருக்கக் கூடியது மனஉறுதி என்ற பலம்; தந்திரோபாயம் என்ற பலம்; சிறந்த வழிநடத்தல் என்ற பலம். தலைவர் அவர்களினால் ஊட்டப்பட்ட, அந்த சிறந்த வழிநடத்தலை, போர்க்களத்திலே போராளிகள் மத்தியிலே ஊட்டி அவர்களைப் போர்க்களத்தை நோக்கி நகர்த்துகின்ற ஒரு சிறந்த தளபதியாக பால்ராஜ் இருந்தார்.

சமர்க்களங்களில் எமது எதிரிகளுடன் ஒப்பிடும்போது எது எதை எமது பலவீனங்களான அம்சங்களாகக் கண்டோமோ அதை எல்லாவற்றையும் சமப்படுத்துகின்றதாக, சமப்படுத்துகின்றதாக என்பதற்கு மேலாக மேவி நிற்கக்கூடியதான ஒரு பலமாக பால்ராஜ் என்கின்ற தனிமனிதனின் ஆளுமைத்திறன், போரியல் திறன், அவருடைய வீரம் அங்கே நின்றது.

எதிரியால் எவ்வளவு பெரிய கனரக ஆயுதங்களால் சுற்றிவளைக்கப்பட்டாலும் - அங்கு டாங்கிகள் நிற்கலாம், எண்ணுக்கணக்கில் ஆயிரக்கணக்கான படைகள் சூழ்ந்து நிற்கலாம் - அங்கு நிற்கும் போராளிகள் சில பேராக இருக்கலாம். ஆனால் அந்த எதிரியின் பலத்தை - எதிரியின் எண்ணிக்கைப் பலமாக இருக்கலாம் அல்லது ஆயுத பலமாக இருக்கலாம் - அந்தப் பலத்தை மேவிச் சமப்படுத்துகின்ற,

ஒரு தனிமனித ஆளுமையையாக அங்கே பால்ராஜ் நிற்பார்.

அந்த ஆளுமைதான் பால்ராஜின் பலம். அதுதான் இன்று தமிழினத்தின் ஒரு தலைசிறந்த போர்த்தளபதியாக எம்முன் அவரை அடையாளம் காட்டி நிற்கின்றது. பால்ராஜ் அவர்கள் நோயினால் வீழ்ந்தார். இயற்கை நோய் ஒன்று அவரைக் கொன்றது என்பது ஒரு சோகச் செய்திதான். சிலர் கூறுவார்கள் அவருக்கு ஒரு வீரச்சாவு வாய்க்கவில்லையே என்று. அவர் சாவை எந்த வேளையிலும் சந்திக்கக் கூடிய, களங்களில்தான் நின்றார். சாவை அவர் தினமும் சந்தித்தார். அவருடைய போர்க்கள வாழ்வு மீண்டும், மீண்டும் சாவுடனான யுத்தமாக அவருக்கு இருந்தது. போர்க்களத்திலே அவர் ஆற்றிய சாதனைகள் ஒரு விடுதலை இயக்கம் என்ற வகையிலேயே உலகம் முழுமைக்குமான ஒரு எடுத்துக்காட்டாக, ஒப்புவமையற்ற ஒரு போரியல் வரலாறாக இருக்கின்றது.

உங்கள் எல்லோருக்கும் தெரியும் - எல்லோராலும் இங்கு பல தடவைகள் கூறப்பட்டன ஆனையிறவு வெற்றியும், குடாரப்புத் தரையிறக்கமும். ஆனையிறவு வெற்றிக்குக் காரணமாக அமைந்தவை ஏராளமானவை. தலைவர் அவர்கள் ஒரு போரியல் தந்திரத்தை வகுத்தார். போராளிகள் தங்களை அர்ப்பணித்தார்கள். தளபதிகள் அங்கு நின்றார்கள். ஆனால் இவை எல்லாவற்றையும் மேவி அந்த வெற்றியை - உலகத் தமிழர் முழுவதுமே பெருமைப்படக் கூடியதும், உலக வல்லரசுகள் அனைவரும் வியந்து பார்த்ததுமான அந்த வெற்றியைப் பெற்றுத் தந்த நேரடிக்காரணி பால்ராஜ் தான் என்பதை நாம் எங்கும் கூறலாம். ஆனால் அந்த வெற்றியின் நாயகன் தான்தான் இந்த வெற்றியைப் பெற்றேன் என்று எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் கர்வம்கொண்டது கிடையாது. அந்த வெற்றியானது ஆயிரம் வரையான போராளிகளுடன் தன்னைத் தாண்டி, தன்னுயிரால் அந்தப் போராளிகள் அனைவருக்கும் நம்பிக்கையூட்டி, தன்னுயிரால் அந்த போர்க்களத்தில் உள்ள எதிரிகளை கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்தது - அவர்களுடைய விநியோக வழியை தடுத்ததுதான் ஆனையிறவின் வெற்றியாக அமைந்தது. அதுதான் இன்றைய வரலாற்றில் தமிழர்களின் ஒரு பெரும் எழிச்சிக்குரிய வெற்றியாகவும் கனிந்தது.



பால்ராஜ் அவர்கள் தனிமனிதனாக ஒரு மிகச்சிறந்த போரியல் ஆசானாக திகழ்ந்தார். மணலாற்றுக் காட்டிலே அவரின் வெற்றிக்குரிய அறிகுறிகளைத் தலைவர் கண்டார். தலைவர் அவர்கள் மணலாற்றுக்காட்டிலே சுற்றிவளைக்கப்பட்டிருந்த போது, தலைவர் அவர்களுக்கான விநியோகங்கள் மற்றும் பாதுகாப்புப் பணிகளை, மணலாற்றுக் காட்டின் ஒரு புறத்தே மேற்கொள்ளும் பாதுகாப்பு அணி ஒன்றின் பொறுப்பாளராக பால்ராஜ் இருந்தார். தலைவர் அவர்களை அந்தக் காட்டிற்குள் பாதுகாப்பதற்குப் பொறுப்பெடுத்திருந்த பால்ராஜின் பொறுப்பாளராக இருந்த பசீலன் அவர்கள் வீரச்சாவடைந்ததைத் தொடர்ந்து பால்ராஜ் அவர்கள் அங்கு சில பொறுப்புக்களை ஏற்றிருந்தார்.

அப்போ அவர் பிரபல்யம் மிக்க ஒரு பொறுப்பாளராக அடையாளம் காணப்பட்டு இருக்கவும் இல்லை, அந்த வேளையிலே பால்ராஜ் அவர்களுக்கு குறிவைத்து, அல்லது தலைவர் அவர்களின் விநியோக அணி மீது குறிவைத்து இந்திய பராத்துருப்பினரால் ஒரு வழிமறிப்புத் தாக்குதல் மேற்கொள்ளப்பட்டது. அந்த பராத்துருப்பினரின் வழிமறிப்புத் தாக்குதலில், அவர்களால் அமைக்கப்பட்ட அந்த கொலைவலையம் என்று கூறப்படுகின்ற அந்த சூட்டுப்பலத்துக்குள்ளே பால்ராஜும் அவரது அணியினரிரும் அகப்பட்டுவிட்டனர். அந்த வேளையில் அவர் உடனடியாக ஒரு முறியடிப்புத் தாக்குதலை மேற்கொண்டார். இவர்களைக் குறிவைத்து அந்த இடத்திலே நிலைபெற்றிருந்த பராத் துருப்பினர் அந்த இடத்திலேயே அழித்தொழிக்கப்பட்டனர். உண்மையிலே ஒரு கொலை வலையத்துக்குள் அகப்பட்டு விட்ட ஒரு அணியானது அந்தப் பதுங்கித் தாக்குதலில் இருந்து தப்பிக்கொள்வது அரிதான விடயம்.





ஆனால் இங்கு அவர் தான் தப்பிக்கொண்டது மட்டும் அல்லாமல் அந்த அணியினரை - தங்களைக் கொல்ல வந்த அந்தப் பராத்துருப்பினரை - முறியடிப்புத் தாக்குதலில் அழித்தொழித்தார். ஒரு பெரிய வெற்றிகரமான வரலாறாக அது இருந்தது. தலைவர் அவர்களின் கவனத்தையும் அந்தச் சம்பவம்தான் ஈர்த்தது. அதிலிருந்துதான் தலைவர் அவர்கள் பால்ராஜை அடையாளம் கண்டார்.

தமிழர்களுடைய விடுதலை வரலாற்றில் பால்ராஜிற்குரிய சரித்திரம் மூடப்படவே மாட்டாது. அவர் எங்கள் எல்லோருடனும் வாழ்வார். தமிழீழ விடுதலை வரலாறு ஒரு வெற்றிகரமான போரியல் வெற்றி நாயகனை உருவாக்கி இருந்தது என்று பெருமைப்படலாம். உலகத்தின் அதிசயிக்கத்தக்க வெற்றிகளை எட்டியுள்ளோம். ஓயாத அலைகள் மூன்றாக இருக்கட்டும், அல்லது அதற்கு முன்னர் ஒவ்வொரு இராணுவமுகாம்களாக - வன்னியிலிருந்த ஒவ்வொரு இராணுவ முகாமாக அடித்து விரட்டி ஒரு பெரிய நிலப்பரப்பை எமது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்ததாக இருக்கட்டும் எல்லாமே பால்ராஜின் தலைமைத்துவத்தாலும் அவருடைய துணிச்சலாலும் விளைந்தவைதான்.

அவருடைய கடைசி நேரத்தில், மணலாற்றுக்கு அண்மித்த போர்க்களங்களிலே போராளிகளுக்கு ஆலோசனை வழங்குகின்ற, போராளிகளுக்கு பயிற்சி வழங்குகின்ற, போர்த்தந்திரோபாயங்களை வழங்குகின்ற பணியிலே அவர் ஈடுபட்டிருந்தார்.

நான் முன் குறிப்பிட்டது போல் இயற்கை வெற்றிடங்களை விடக்கூடாது என்பதில் அவர் கவனமாக இருந்தார். பால்ராஜினுடைய இழப்பு இந்த தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றில் குறிப்பிடத்தக்க இழப்பாகப் பதிவு பெறும். அவருடைய அந்த வீரத்தினால் அந்தப் பதிவைப் பெறும். ஆனால் அது வெற்றிடமாக மாறாது, ஏனெனில் அந்த வெற்றிடம் உருவாகக் கூடாது என்பதற்காக அவர் இருபது வருடம் உழைத்துள்ளார்.



ஒரு வீரத்தின் குறியீடாக, தமிழர்களின் இராணுவ பலத்தின், வடிவத்தின் குறியீடாக பால்ராஜ் தமிழரின் வாழ்வெல்லாம் நிலைப்பார்.





# முல்லைத்தீவில் லீமா பெற்றுத்தந்த ஆட்லறியே புலிகளை மரபுவழி இராணுவமாக உலகைப் பார்க்க வைத்தது

**- கடற்புலிகளின் சிறப்புத்தளபதி கேணல் சூசை -**

பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் வீரவணக்க நிகழ்வில் கேணல் சூசை அவர்கள் நிகழ்த்திய உரை.

விடுதலைப் போராட்ட வரலாற்றிலே பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் சாதனைகள் அளவிட முடியாதவை. அந்தச் சாதனைகளின் சிகரம் இன்று அமைதியாக உறங்கிக்கொண்டிருக்கின்றது.



தன்னுடைய வாழ்நாள் முழுவதும் இந்த மண்ணுக்காகவும், மக்களினுடைய விடுதலைக்காகவும் தன்னுடைய உடலில் ஏற்பட்ட வருத்தத்தையும் பொருட்படுத்தாமல் கடைசி நாள் வரைக்கும் இந்த மண்ணுக்காகவே வாழ்ந்து மடிந்தவர் பிரிகேடியர் பால்ராஜ்.

இந்திய இராணுவம் எங்களுடைய மண்ணை ஆக்கிரமித்தபோது அந்த இராணுவத்திற்கு



எதிராக மேஜர் பசீலனுடன் யாழ்ப்பாணத்தில் தாக்குதல்களை தொடுத்து வந்தார். இந்தியப் படைகளுக்கு எதிராகப் போரிடும் போது அவருடைய அணியில் இருந்த ஆர்.பி.ஜீ சூட்டாளர் அடுத்தடுத்து வந்த இந்தியப்படைகளினுடைய டாங்கிகளைக் கண்டு திகைப்புற்ற நேரம் அந்த ஆர். பி. ஜியை வாங்கி டாங்கியைத் தகர்த்தவர் தான் பால்ராஜ்.

பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் கால்படாத களமுனைகளே இல்லை. யாழ்ப்பாணத்தை விட்டு எங்களுடைய தலைவர் மணலாற்றுக்கு வந்த போது மேஜர் பசீலனால் தலைவருக்கு உதவியாக புடம்போட்டு அனுப்பப்பட்டவர் தான் பால்ராஜ். மணலாற்றுக்காட்டுக்குள் எந்த நேரமும் இந்தியப் படைகளின் சுற்றி வளைப்புக்கள், தாக்குதல்கள். அதற்கு நடுவிலும் விடுதலைப் போராட்டத்தை முன்னெடுப்பதற்காக, போரில் பல வடிவங்களை உருவாக்குவதற்காக மணலாற்றுக்கும் நாயாற்றுக்கும் மணலாற்றுக்கும் முல்லைத்தீவுமாக நடக்காத நாட்கள் இல்லை.

இந்த வகையில், எப்படியாவது தலைவரை அழிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு இந்தியப்படைகளின் ஒவ்வொரு தளபதியும் நித்திய குளத்தில் முகாமமைத்து மேற்கொண்ட இராணுவ நடவடிக்கைதான் செக்மேற். அந்த நடவடிக்கை நடந்து கொண்டிருந்த நேரம்தான் நானும் தமிழ்ச் செல்வனும் சில போராளிகளுமாக தலைவரைச் சந்திப்பதற்காக மணலாற்றுக்கு வந்தோம். அன்றைய தினம் எங்களை உள்ளுக்குள் அழைத்துச் செல்கின்ற அணிக்கு பொறுப்பாளராக பால்ராஜ் இருந்தார். இந்தியப்படை பதுங்கியிருந்து எங்களுக்கெதிரான தாக்குதல்களை மேற்கொண்டபோது அதில் நான் காயம் அடைந்தேன். எழுந்து நடமாட முடியாத நிலையில் இருந்தபோது தலைவருடைய இடத்திற்கு என்னை சுமந்துசென்றவர் பால்ராஜ்.



ஒப்பரேசன் நடந்து கொண்டிருந்தபோது எனக்கு தற்காலிக சிகிச்சை முடிந்த பின் 72 மணித்தியாலங்களில் மேலதிக சிகிச்சை வழங்கப்பட வேண்டிய சூழலில் எல்லாப் பக்கமும் இந்தியப்படை வளைத்து நின்ற போதும் எவ்வளவோ துன்பங்களுக்கு, சிரமங்களுக்கு மத்தியில் என்னை சுமந்துகொண்டு வந்து செம்மலையில் வைத்து படகில் வழியனுப்பி வைத்தார்.





முல்லைத்தீவு மாவட்டத்தில் இந்தியப்படைகளுக்கு எதிராக நடத்தப்பட்ட தாக்குதல்களில் ஆகக்கூடிய ஆயுதங்களை பெற்றுக்கொடுத்ததும் பால் ராஜ்தான்.

1992 இல் பலாலியில் உள்ள நாலரை கீலோ மீற்றர் நீள மான காவலரண்களை தகர்த் தெறிந்து பெருமளவான ஆயுதங் களை அள்ளினார். இந்த சூழ்நிலை யில் தலைவருடைய எதிர்பார்ப்பு ஒரு முகாமை வெற்றிகொள்வதுதான். கிளா லியைத் தளமாக வைத்துக்கொண்டு பூநகரியைத்தாக்கி அழிப்பதற்கான திட்டத்தோடு நாம் இருக்க, இராணுவம் அதற்கு ஒரு மாற்றுவடிவமாக ஆனையிற வில் இருந்து யாழ்தேவி நடவடிக்கையை முன்னெடுத்தது. அதில் தன்னுடைய படையணியை இறக்கி யுத்த டாங்கிகளை அழித்தார். அந்த சமரில் தான் காலில் பாரிய விழுப்புண் அடைந்தார். காலை நேராக நடக்க முடியாத அளவில் இருந்தார். ஆனால் அவர் போட்ட திட்டத்தை நெறிப்படுத்துவதற்கு தவளை என்ற பெயரில் தாக்குதல் பூநகரியில் நடக்கின்றது. கடற்படையின் படகுகள், பெருமளவு ஆயுதங்கள் அள்ளப்பட்டன. ஆனாலும் மருத்துவமனையில் இருந்து கொண்டு எந்த சூழ்நிலையில் எந்தெந்த இடங்களுக்குள்ளால் எப்படி எப்படி நகர்த்தி அதை முன்னெடுக்க வேண்டும் என்று தொலைத் தொடர்புக் கருவிகள் ஊடாக போர்க்களத்தில் தான் இல்லாத வேளையிலும் கூட இறங்குகின்ற போராளிகள் வெற்றியைப் பெற்றுவிட வேண்டும் என்று அக்கறையோடு கட்டளை பிறப்பித்தார்.



1995 ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் நின்றபோது 50 நாட்களாக போரிட்டோம். அந்த நேரத்தில் வெளியேற வேண்டிய கட்டாய சூழ்நிலையில் வெளியேறினோம். ஆனால் பழிவாங்க வேண்டும் என்ற ஓர்மத்தோடு பழிவாங்குவதற்கு தீர்மானிக்கப்பட்டது. அவருடைய மாவட்டமான முல்லைத்தீவில் இருக்கின்ற முகாமையும் 1600 இராணுவத்தையும் துடைத்தொழிப்பதுதான் தலைவருடைய கட்டளை.

பயிற்சியை எடுக்கின்ற ஒவ்வொரு அணிகளிலும் போராளிகளின் உளவுரண்களை அதிகரிப்பதற்காக மிகவும் கடுமையாக உழைத்தார். உண்மையில் ஓயாத அலைகள் 01 மூன்று நாள் தாக்குதல் என்று மட்டுப்படுத்திவிட முடியாது. இந்த முல்லைத்தீவின் வெற்றிக்காக இந்தச் சண்டையில் கலந்துகொள்கின்ற ஒவ்வொரு படையணிக்கும் மணித்தியாலக்கணக்காகத் திரும்பத் திரும்ப தெளிவுபடுத்துவார். நித்திரை கண்களை ஆக்கிரமித்த பொழுதுகளில் விக்சை இமைகளுக்கு பூசி நித்திரையை குறைத்துக்கொண்டு வரைபடத்தில் குந்தி இருந்து லீமா விளங்கப்படுத்தத்தொடங்கினால் இராணுவ முகாமை வெற்றிகொண்டு செல்கின்ற உணர்வை ஏற்படுத்துவார். அதுதான் இந்த முல்லைத்தீவைப் பெற்றுத்தந்தது. இந்த முல்லைத்தீவின் வீழ்ச்சி தான் போராட்டத்தின்





திருப்புமுனையை ஏற்படுத்தித்தந்தது. விடுதலைப்புலிகளை மரபுவழி இராணுவமாக உலகம் பார்ப்பதற்கான சூழ்நிலையை ஏற்படுத்தித் தந்தது என்று சொன்னால் லீமா முல்லைத்தீவில் பெற்றுத்தந்த ஆட்லறிதான்.

கிளிநொச்சி மாவட்டத்தை தனியாக துண்டிப்பதற்கு திட்டம் ஒன்றைத் தலைவர் வகுத்தார். அது பரந்தன் பகுதியில் ஊடறுப்பு ஒன்றைச் செய்து கிளிநொச்சியை தனிமைப்படுத்துவது. அந்த ஊடறுப்புச் சமருக்கு தலைமை தாங்கி உள்ளுக்குள் நுழைந்து விட்டார் பால்ராஜ். கட்டளைப்பீடத்தில் கட்டளைகள் வழங்கிக்கொண்டிருந்தார் தலைவர்.

தலைவருடைய கருத்துக்கு களத்திலே வடிவம் கொடுத்த தளபதி இன்றைக்கு எங்களிடம் இல்லை. ஆனால் அவர் நிறைய கட்டளைத்தளபதிகளையும் வழிநடத்துகின்ற தளபதிகளையும் உருவாக்கியிருக்கின்றார். போரியல் வரலாற்றில் மறக்க முடியாத சம்பவமாக இருப்பது குடாரப்பு தரையிறக்கம். அதை இன்று நாங்கள் வெளியில் பெருமையாக சொல்லிக்கொண்டிருகிறோம். எவ்வித தொடர்புகளும் இல்லாமல் 1200 போராளிகளோடு 13 கிலோ மீற்றருக்கு அப்பால் போய் தரை இறங்கி இரவோடு இரவாக கண்டி வீதியை ஊடறுத்து நிலைகொண்டதோடு அந்த 1200 போராளிகளின் சுமைகளையும் சுமந்தவர் இந்த பால்ராஜ்.

மனதில் ஓர்மத்தோடும், வெல்வோம் என்ற நம்பிக்கையோடும் முற்றுகைக்குள் புகுந்திருந்து 34 நாட்களாக போரிட்ட முறையில் எதிரி சிந்திக்க இடமில்லாமல் படைத்தளபதிகளை மாற்றி மாற்றி போரிட்டான். அந்த நேரத்தில் போராளிகளின் உளவுரண்களை அதிகரித்து அதிகரித்துப் போரிட்டு வென்றவர் பால்ராஜ். அந்தத் தரையிறக்கத்தில் நாங்கள் பங்கெடுத்துக் கொண்டாலும் அந்த முற்றுகைக்குள் நிமிடம் கூட சிந்திக்கமுடியாமல் போரிட்டு ஆனையிறவை வெற்றிகொள்வதற்கு காரணமாக இருந்தவர் பிரிகேடியர் பால்ராஜ் அவர்களே.





# தளபதி பால்ராஜ் களத்தில் நின்றால் இராணுவத்திற்கு இரத்தம் உறையும்

- வடபோர்முனை கட்டளைத்தளபதி கேணல் தீபன் -

பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் வீரவணக்க நிகழ்வில் கட்டளைத்தளபதி கேணல் தீபன் அவர்கள் நிகழ்த்திய உரை.



விடுதலைப் போராட்டத்திலே ஒரு போராளியால் அதி உச்சமாக என்னென்ன செய்ய முடியுமோ அவ்வளவு தூரத்திற்கு இந்தப் போராட்டத்திலே தனது உழைப்பை அதி உச்சமாக வழங்கிய தளபதி இவர். தளபதி பால்ராஜ் பற்றிக் குறிப்பிடுவதென்றால் வீரம் என்றால் தளபதி பால்ராஜ் என்று சொல்லலாம். தன்னம்பிக்கைக்கு மறுபெயர் பால்ராஜ் என்று சொல்லலாம். 25 வருட போராட்ட காலத்திலே இந்த விடுதலைப்போராட்டத்திலே அதி உச்சமான



சாதனைகளைப் படைத்து, சாதனைகளை நிகழ்த்தி விடுதலைப் போராட்டத்தின் திருப்புமுனைகளுக்கு காரணமாக இருந்த ஒரு முக்கிய தளபதியாக எங்கள் முன்னிலே இருந்திருக்கின்றார்.

தளபதி பால்ராஜ் களத்திலே நிற்கின்றார் என்று சொன்னால் சிங்கள இராணுவத்திற்கு இரத்தம் உறையும். தளபதி பால்ராஜ் அவர்களை ஒவ்வொரு சிங்கள இராணுவத்திற்கும் தெரியும். அவ்வளவுதூரத்திற்கு இந்த விடுதலைப்போராட்டத்திலே எதிரியைக் கதிகலங்கவைத்து, சிதறடித்து வைத்திருக்கின்றார்.

தேசியத்தலைவர் அவர்கள் ஒரு திட்டத்தை போட்டால் அதை நூறு வீதம் செய்து முடிக்கவேண்டும் என்பதிலே மிகவும் தீவிரமாக இருப்பார். ஒவ்வொரு போராளியையும் உணர்வூட்டி அவர்கள் எந்த எதிரிக்கு முன்னாலும் பதற்றமில்லாமல் நின்று சண்டை பிடிக்கவைப்பார். அவர் கதைத்தார் என்று சொன்னால் அது நடக்கும். அவ்வளவுக்கு உறுதியைக்கொடுப்பார். அவ்வாறே செயற்பட்டிருக்கிறார். விடுதலைப்போராட்டத்திலே அழிக்கப்படமுடியாத வரலாறு பிரிகேடியர் பால்ராஜ். எங்களுக்கு சோகங்கள் இருக்கலாம். ஆனால் நாங்கள் சோர்ந்து விட முடியாது. ஏனென்றால் வீரத்தையும் வரலாற்றையும் தான் எங்களுக்கு இவர் தந்து விட்டுப் போயிருக்கிறார் அந்த வரலாற்றையும் வீரத்தையும் வீச்சாக்கவேண்டிய கடமையும் பொறுப்பும் எங்கள் எல்லோருக்கும் இருக்கின்றது.

# தன்னை முற்றுமுழுதாக அர்ப்பணித்த ஒரு மாவீரர் பிரிகேடியர் பால்ராஜ்

**- தமிழீழ அரசியல்துறைப் பொறுப்பாளர் பா. நடேசன் -**

பிரிகேடியர் பால்ராஜ் வீரவணக்க நிகழ்வில் ஆற்றிய உரை.

பிரிகேடியர் பால்ராஜ் தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றில் தமிழீழ தேசத்திற்காக, தமிழீழ மக்களுக்காக, தமிழீழத் தேசியத் தலைவருக்காக இந்தப் போராட்டத்தின் பெரிய அரணாக, பாதுகாப்பாக, அத்திவாரமாக இருந்து பெரிய அர்ப்பணிப்போடு செயற்பட்டு தன்னை முற்றுமுழுதாக அர்ப்பணித்த ஒரு மாவீரர்.



தமிழீழத்தின் இதய பூமியை தனது தாய்நிலமாகக் கொண்டவன். சிறுவயதில் சிங்கள பேரினவாதத்தின், சிங்கள பயங்கரவாதத்தின் அடக்கு முறைகளுக்கும், ஒடுக்குமுறைக ளுக்கும் முகம்கொடுத்தும் அவற்றைக் கண்ணால் கண்டவன். இதயபூமி பிரதேசத்தில் தமிழ்மக்கள் இரவோடு இரவாக சிங்கள அரசபடைகளினால் கலைக்கப்பட்டபோதும், சிங்கள அரச படைகளினால் தமிழ்மக்கள் மீது கொலைகள் ஏவிவிடப்பட்ட போதும், அரச



பயங்கரவாதம் தமிழீழ தாயகப் பிரதேசத்தில் தலைவிரித்தாடிய போதும் அதனை நேரிற்கண்டு, அதனூடாக விடுதலை உணர்வு சிறுவயதிலேயே உந்தப்பெற்று தன்னை இந்த விடுதலைப் போராட்டத்தில் இணைத்துக் கொண்ட மாவீரன்.

இவர் தன்னை ஒரு முழுநேரப் போராளியாக இணைத்து இந்தியாவில் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்த காலத்தில் அவரை முதன் முதலாக அவரது பயிற்சி முகாமில் சந்தித்தேன். அதன்போது அவர் இராணுவ விஞ்ஞானத்தில் மட்டுமல்லாது அரசியலில் விஞ்ஞானத்தில் கூட மிக ஆழமான அறிவுள்ளவராக இருந்தார். அவரது பயிற்சிக் காலத்தின்போதும் சிறந்த ஒரு வல்லுநராகக் காணப்பட்டார்.

பயிற்சியை முடித்துக் கொண்டு இங்கு வந்த காலப்பகுதியில் உலகத்தின் மிகப்பெரிய வல்லரசான இந்திய இராணுவம் தமிழீழ தாயகப் பிரதேசத்தில் தன்னை அமைதிப்படை என்ற ரீதியில் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. இந்திய இராணுவத்துடன் சண்டை இடம்பெற்றுக் கொண்டிருந்த போது எங்களுடைய மூத்த தளபதிகள் பலர் வீரச்சாவைத் தழுவிக்கொண்டார்கள்.

அதாவது குமரப்பா, புலேந்திரன், இம்ரான், பாண்டியன், சந்தோசம் மாஸ்டர் உட்பட பல மூத்த தளபதிகள் வீரச்சாவைத் தழுவிக்கொண்ட நேரம். இந்திய இராணுவத்துடன் எமது இயக்கம் மூர்க்கமாக மோதிக் கொண்ட நேரம். எமது தலைவரைப் பாதுகாக்கின்ற ஒரு பெரிய பொறுப்பு எங்களுடைய போராளிகளுக்கும் அப்போது இருந்த தளபதிகளுக்கும் பாரிய பொறுப்பாக இருந்தது. அந்தப் பொறுப்பை சுமந்தவர்களில் பால்ராஜ் முக்கியமானவர். எமது தலைவர் அவர்கள் பாதுகாப்பாக வன்னிப் பிரதேசத்திற்கு வந்து மணலாற்றுக் காட்டில் இருந்த போது தலைவரின் பாதுகாப்பு வியூகங்களை வகுப்பதிலும் தலைவரை நோக்கி இந்திய இராணுவம் நகர்ந்து செல்லாது வெளியிலிருந்து தடுப்பதிலும் பிரிகேடியர் பால்ராஜின் பங்கு அளப்பரியது. அது வாயால் வர்ணிக்க முடியாதது.



அதேநேரம் அன்றைய நாட்களில் இந்திய இராணுவத்துடன் மோதிக்கொண்டிருந்தபோது எமது போராளிகள், தலைவரிடம் இருந்த ஏனைய போராளி அணிகள் எல்லோருக்கும் வெளியிலிருந்து உணவுகள் செல்வதென்றாலும், அல்லது காயப்பட்ட போராளிகளை வெளியே கொண்டு சென்று மருத்துவ சிகிச்சை அளிப்பதென்றாலும், அல்லது போராளிகளை வேறு இடங்களுக்கு கூட்டிச் சென்று அவர்களுக்கு உரிய பணிகளை ஒப்படைப்பதில் அவர்களுக்கு உதவி செய்வதென்றாலும் பிரிகேடியர் பால்ராஜின் அர்ப்பணிப்பானது உண்மையிலேயே மறக்க முடியாததாக உள்ளது.

இந்திய இராணுவம் இங்கு ஆக்கிரமித்திருந்த காலப்பகுதியில் பிரிகேடியர் பால்ராஜினுடைய ஒவ்வொரு செயற்பாடும் ஒவ்வொரு இந்திய இராணுவத் தளபதிகளிலிருந்து ஒவ்வொரு இந்திய இராணுவ



சிப்பாய்க்கும் தெரியும். அது மட்டுமல்ல இங்குள்ள மக்கள் குறிப்பாக எங்களுடைய தாயகப் பிரதேசத்தில் வன்னிப் பிரதேசத்தில் இருந்த மக்களுக்கு நன்றாகத் தெரியும். அவரது கால்படாத இடம்இல்லை. இந்திய இராணுவக் காலப்பகுதியில் மணலாற்றுக காடென்றாலும் சரி அல்லது எந்தப் பிரதேசத்திலுள்ள காடென்றாலும் சரி நடந்து சென்று தனக்கு இடப்பட்ட பணியை குறிப்பாக இந்திய இராணுவத்தின் மீதான தாக்குதல் என்றாலும் சரி அல்லது விடுதலைப்பணி சார்ந்த வேறு பணி என்றாலும் சரி அவர் பெரும் பணி ஆற்றினார்.

ஆகையினால் தான் அவர் எல்லாப் போராளிகள் மட்டுமல்ல எமது தேசியத்தலைவருடைய பாசத்திற்கும் அன்பிற்கும் ஆட்பட்டவர். தேசியத்தலைவர் மட்டுமல்ல தற்போது எமது இயக்கத்தில் இருக்கின்ற தளபதிகள் கூட அவரை அன்பாக, பண்பாக மிகவும் ஆழமாக அன்று தொட்டு இன்றுவரை நேசித்துக்கொண்டிருக்கிறார்கள். காரணம் எவ்வாறான இடையூறுகள் வந்தாலும், பெரிய வல்லாதிக்கத்தின் இராணுவம் ஆக்கிரமித்திருந்த வேளையிலும்கூட, அவற்றை எல்லாம் மிக இலகுவாக மிகச் சுலபமாக மிகவும் ஒரு சின்ன விடயமாக போராளிகளுக்கு எடுத்துக்காட்டி போராளிகளுடைய மனோதிடத்தை வளர்ப்பதில் இந்திய இராணுவக் காலத்தில் பிரிகேடியர் பால்ராஜ் ஆற்றிய பணி என்பது அவர்களுடன் இருந்தவர்களுக்கும் அன்றைய காலத்தில் அவருடன் ஒன்றாகப் பணிசெய்த தளபதிகளுக்கும் தெரியும். இன்று கூட பல போராளிகள் உயிர்வாழ்கின்றார்கள் என்றால், பல தளபதிகள் இவ்வாறான ஆபத்துக்களில் இருந்து தப்பியிருக்கின்றார்கள் என்றால் அன்றைக்கு சண்டைக்களங்களில் அவரது அர்ப்பணிப்பும், சண்டைகளில் அவரது சாதனையும்தான்.

இந்திய இராணுவம் அவரை எல்லா இடங்களிலும் தேடிக்கொண்டிருந்த காலப்பகுதியில் ஒவ்வொரு இடங்களிலும் இந்திய இராணுவம் அஞ்சுமளவிற்கு, உலக வல்லாதிக்கத்தின் பெரிய இராணுவம் பயந்து செல்லும் அளவிற்கு பால்ராஜின் இராணுவ வளர்ச்சிமட்டுமல்ல அந்த இராணுவத்தின் மீதான தாக்குதல் வியூகங்கள் வரவர நுட்பமாகவும் பலமாகவும் அதிகரித்துக் கொண்டு போனது. இந்திய இராணுவம் போகின்ற கடைசிக்காலத்தில் பல இராணுவத்தை அழிக்கக்கூடிய முறையில் பால்ராஜினுடைய போராற்றல், போர்வீரம் அந்தக் காலத்திலேயே அவருக்கு வேகமாக வளர்ந்திருந்தது. இதனால்தான் தலைவர் அவர்கள் இந்திய இராணுவம் சென்றதும் எங்களுடைய இயக்கத்தினுடைய போரியல் வரலாற்றில் அது ஒரு இராணுவ படைமுகாம் தகர்ப்பு என்றாலும் சரி அல்லது ஒரு முறியடிப்புச் சமர் என்றாலும் சரி பால்ராஜ்தான் அதில் முதல் முதலாக பங்குகொண்ட வரலாறு இருக்கின்றது. தாக்குதல் சம்பவங்களில் இவ்வாறு பல சாதனைகளைப் படைத்த பிரிகேடியர் பால்ராஜ் குறுகிய காலத்தினுள் ஒரு பெரிய மரபுவழிப் படையணியை வழி நடத்தி சிங்கள இராணுவத்திற்கு பாரிய அச்சுறுத்தலாக இருந்திருக்கின்றார். சிங்கள இராணுவத்திற்கு அச்சுறுத்தலாக இருந்தவர் தமிழர்சேனைக்கு, தமிழர் படைக்கு பலம் சேர்த்தது மட்டுமல்ல. பெருமை சேர்த்தது மட்டுமல்ல. முழு தமிழ்த் தேசிய இனத்தையே தலைநிமிரச் செய்கின்ற பாரிய இராணுவ நடவடிக்கைக்கும் அவரே தலைமை தாங்கியதுதான் தமிழீழ விடுதலைப்போராட்டத்தின் போரியல் வரலாறு. இவ்வாறு ஏராளமாக சொல்லிக்கொண்டே போகலாம். அதுமட்டுமல்ல. போகின்ற பிரதேசங்களில் போராளிகளுடன் மட்டுமல்லாது அங்கு இருக்கின்ற மக்களுடன் உறவாடி அந்த மக்களையும் அந்த இராணுவ நடவடிக்கையில் அந்தப் போர்முனையில் போராட்டத்தில் பங்காளிகளாக மாற்றுகின்ற ஒரு ஆற்றல் பிரிகேடியர் பால்ராஜிற்கு இருக்கின்றது.





அந்த ஆற்றலானது செல்லுமிடமெல்லாம் வயது வேறுபாடில்லாமல் மக்களுடன் உறவாடி இராணுவத் தாக்குதல்கள், இராணுவ வியூகங்களுக்கு மக்கள் ஆதரவைப் பெற்றுக் கொள்வதில் பிரிகேடியர் பால்ராஜ் மிகுந்த மதிநுட்பமான சிறந்த ஒரு தளபதியாக அவரைப் பார்க்கின்றேன்.



# வீரவணக்கம்



நீக்கமற நிறைந்த பொருள் நீ
நீத்தாரில் நீங்காப் பெயர் நீ
போரில் புதிய பாடத்தினை
புதுப்பித்த சூரியன் நீ
விடுதலை விரும்பி நீ
வஞ்சிக்கப்பட்ட வாழ்வினை
வசமாக்க உழைத்தவன் நீ
பகை முகாம்களைப் பிளந்து
பீறிட்ட நெருப்பாறு நீ
வெல்லவென உருவெடுத்து
பலமெடுத்தாடிய போர்ச் சூறாவளி நீ
எண்ணிவிடும் நாட்களுக்குள்
வன்னிபிடிக்க வந்தவரை
வாரிச்சுருட்டிய புயல் நீ
இடர்கள் நடுவே வேரூன்றி
போரிடை பகைவீழ்த்தி
பார்புகழ உச்சத்திலேறி
விடுதலை அரசனின் வலமாகி
வாழ்ந்துபோன வல்லமை நீ

காலம் இன்றுனை சுமக்கிறது வீரா
காலங்கள் நூறு வாழுவாய் வீரா
தோளிலே உனைத் தாங்கி
நினைவிலே செயல் தாங்கி
வீச்சாகி விரைகிறோம்
வென்றாடி மீளுவோம்.



பூநகரிப் படையணி
தமிழீழ விடுதலைப்புலிகள்
தமிழம்.

# பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் போரியல் வாழ்வுக்காலம் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியது

- அம்பாறை மாவட்ட கட்டளைத் தளபதி கேணல் ராம் -

**பிரிகேடியர் பால்ராஜ் அவர்கள் குறித்து அம்பாறை மாவட்ட தளபதிகள், போராளிகள் சார்பில் தளபதி கேணல் ராம் அவர்கள் வெளியிட்ட குறிப்பு.**

மேதகு தலைவர் அவர்களின் திட்டங்களைக் களமட்டத்தில் நிறைவேற்றம் செய்யும் பொறுப்பு அவருக்குத் தரப்படும் கணத்தில் இருந்தே அவர் ஒரு தேனீயைப் போலச் சுறு சுறுப்பாகிவிடுவார். அவரில் பொங்கி வழியும் உற்சாகம் மற்றைய பொறுப்பாளர்களையும் போராளிகளையும் பற்றிக்கொள்ளும். நம்பிக்கை தெறிக்கும் வார்த்தைகளால் போராளிகளின் உளவுரணைப் பேணும் பாங்கை அவரிடம் பல முறை கண்டிருக்கிறேன்.



அவருடன் சமர்களில் கலந்துகொண்ட அனுபவங்கள் யாவும் எனது போரியல் வாழ்வின் இனிமையான பொழுதுகள் என்று நினைக்கிறேன். தவளை நடவடிக்கை, சூரியக்கதிர்



நடவடிக்கை, ஓயாத அலைகள் ஒன்று, ஓயாத அலைகள் இரண்டு போன்ற நடவடிக்கைகளில் அவருடன் இணைந்து பணியாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஓயாதஅலை ஒன்று நடவடிக்கையின் போது தென் தமிழீழப் போராளிகளை தனது ஆளுமைக்குள் லாவகமாக உள்வாங்கி அவர்களின் உள்ளார்ந்த ஆற்றல்களை வெளிக்கொணர்வதற்கான ஊக்கத்தையும் அறிவுரைகளையும் அவர் வழங்கினார்.

அந்தச் சமரிலே எங்களுக்குத் தரப்பட்ட பாதையில் சில சவால்கள் இருந்தன. வலிந்த தாக்குதலொன்றின்போது பெரிய வெளிகளைக் கடப்பதில் போராளிகள் எதிர்கொள்ளக் கூடிய இடர்களைப் பற்றி மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறி, அந்தத் தடைகளைத் தாண்டுவதற்கான ஆலோசனைகளையும் செயலூக்கத்தையும் அவர் ஒவ்வொரு போராளியின் மனதிலும் விதைத்தார் என்றே சொல்ல வேண்டும். களைப்படைந்து நிற்கும் போராளிகள் கூட அவர் வந்து உரையாடிவிட்டுச் சென்றபின்னர் நம்பிக்கையையும் உற்சாகத்தையும் வெளிப்படுத்தியதை இன்றும் நான் நினைவுகொள்கிறேன்.

அந்தப் போராளிகளின் ஆற்றல் மீது அவர் கொண்டிருந்த நம்பிக்கை அவரின் ஒவ்வொரு சொல்லிலும் செயலிலும் வெளிப்பட்டதை நான் கண்டேன். சவாலான அந்தப் பாதையை நீங்கள் கைப்பற்றுவது மட்டுமல்ல ஏனைய அணிகளுக்கும் நீங்களே உதவவேண்டியிருக்கும் என்றும் அவர் சொல்லியிருந்தார். இறுதியில் அவர் சொன்னது போலவே அனைத்தும் நிகழ்ந்து முடிந்தன.

ஓயாத அலைகள் இரண்டு நடவடிக்கையில் படையினரைத் தப்பியோட விடாது மறிக்கும் பணியை மேதகு தேசியத் தலைவர் அவர்கள் பிரிகேடியர் பால்ராஜிற்குத் தந்திருந்தார். வேறு ஐந்து பாதைகளுக்கான பொறுப்பு எனக்குத் தரப்பட்டிருந்தது. அவருக்கான இரண்டு கொம்பனிப் போராளிகளையும் பொறுப்பாளர்களையும் ஏற்பாடு செய்துவிட்டு அவரைச் சந்தித்தேன்.



போராளிகளையும் அவ்வணிகளுக்கான பொறுப்பாளர்களையும் சந்தித்து உரையாடிய அவர், அவர்கள் மீது தான் கொண்டிருந்த நம்பிக்கையை அவ்விடத்திலேயே வெளிப்படுத்தி, தலைவர் இட்ட ஆணையை நீங்கள் நிச்சயம் நிறைவேற்றுவீர்கள் என்று கூறி அவர்களின் மனதிலே உரத்தினை ஏற்படுத்தினார். அந்தக் கணத்தில் இருந்து தலைவர் அழைத்தாலேயொழிய அப்போராளிகளை விட்டு அகலாமல் நின்று அவர்களின் பயிற்சியிலும் நலனிலும் உளவுரணிலும் அக்கறையோடு அவர் உழைத்ததை மறக்க முடியாது. அவரின் அந்த உழைப்பும், அர்ப்பணிப்பும், வீரமும் ஓயாத அலைகள் இரண்டு நடவடிக்கையை வென்றுதரக் காலாய் அமைந்தன என்பதையும் மறக்க முடியாது.

பிரிகேடியர் பால்ராஜ் அவர்களின் போரியல் வாழ்வில் இதுபோன்ற படிப்பினையான, முன்னு தாரணமாக போற்றுதற்குரிய பல பண்புகளை நான் அவதானித்திருக்கிறேன், கற்றுக்கொண்டிருக் கிறேன். விழுப்புண்ணடைந்திருந்த நிலையிலும் களங்களிலே ஒலித்த அவரின் ஊன்றுகோலின் ஓசையையும் உடல் நிலை பாதிக்கப்பட்டிருந்த நிலையிலும் களப்பணிகளில் இருந்து தன்னை அந்நியப்படுத்தாத அவரின் உயர்பண்பையும் என்னால் மறக்க முடியவில்லை.

மண்ணின் மைந்தர்கள் சாவடைந்து விட்டார்களே என்று சஞ்சலம் கொள்ளாது அவர்கள் இந்த மண்ணில் வாழ்ந்தார்கள் என்பதற்காகப் பெருமையும் எழுச்சியும் கொள்வதே பிரிகேடியர் பால்ராஜ் அவர்களுக்கு நாம் செலுத்துகின்ற மரியாதை என்று நினைக்கிறேன்.

அம்பாறை மாவட்டப் போராளிகளாகிய நாங்கள் அவரின் இறுதி நிகழ்வுகள் நிகழும் இடத்தில் இருந்து வெகு தொலைவில் நின்றாலும் எங்கள் உள்ளங்கள் அவரின் நினைவுகளோடு அவருக்காய் ஏங்கும் உறவுகளோடும் கலந்து நிற்கின்றன.

# பிரிகேடியர் பால்ராஜ்: வீரத்தின் குறியீடு

**- சமராக்கப் பிரிவுப் பொறுப்பாளர் யோ. செ. யோகி -**

முல்லை மாவட்டத்தின் கொக்குத்தொடுவாயைப் பிறப்பிடமாகக்கொண்ட கந்தையா பாலசேகரம் எனும் இயற்பெயரைக்கொண்ட பிரிகேடியர் பால்ராஜ் 20.05.2008 அன்று மாரடைப்பால் சாவடைந்தார் என்ற செய்தி கேட்டு தமிழ்பேசும் மக்கள் மிகுந்த கவலையடைந்துள்ளனர்.



1984-இல் இருந்து ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகள் போராட்டமே வாழ்வு என வாழ்ந்த ஒரு வீரனே பிரிகேடியர் பால்ராஜ்.

இன்று களமுனைத் தளபதிகளாக இருக்கும் பானு, தீபன், சொர்ணம், வேலவன், கீர்த்தி,



வசந்தன், ராம், யாழினி, துர்க்கா என யாரைக் கேட்டாலும் பால்ராஜ் அவரைப் போன்ற ஒரு வீரனைச் சந்திப்பது அரிதிலும் அரிதே எனக் கூறுவர்.

ஒரு வீரன் கண்கள் சிவந்து யானைப் பிணத்தின் நடுவே தன் கையில் வேலை ஊன்றி பகைவர் வெள்ளம் போல் வரவும் அசையாது நின்றான் என ஒரு வீரனின் வீரத்தைப் புறப்பொருள் வெண்பாமாலை பேசும். அத்தகைய வீரத்தை எருமை மறம் என்று அழைப்பர். இத்தகைய எருமை மறத் தன்மையை மேஜர் பசீலன் கொண்டிருந்தார் என மேஜர் பசீலனை நினைவுகூர்வோர் சொல்வதுண்டு. ஒரு முறை மூத்த உறுப்பினரான குட்டியோடு பசீலன் குறித்துப் பேசியபோது பசீலன் என்றால் பால்ராஜ் இருவரையும் அந்த விடயத்தில் பிரித்துப் பார்க்க முடியாது எனக் கூறினார்.

கொக்குத்தொடுவாயிலிருந்து சிங்களவனின் வன்பறிப்பால் 1990-களில் இடம்பெயர்ந்த பல குடும்பங்களில் பால்ராஜுவின் குடும்பமும் ஒன்றாகும். 1983ஆம் ஆண்டு காலப்பகுதியில் லெப். காண்டீபனுடன் தொடர்பை ஏற்படுத்திக் கொண்ட பால்ராஜ் போராளிகளுக்கு உணவு எடுத்துத்தரல், போக்குவரத்து ஒழுங்கு செய்தல் போன்ற பணிகளை சபா, சசி போன்றோருடன் இணைந்து செய்து வந்தார். 1984 ஆம் ஆண்டு காலப்பகுதியில் தன்னை ஒரு போராளியாக இணைத்துக்கொண்டார்.

தமிழ் விவசாயிகள், ஊர்மக்களிடமிருந்த சொட்கண்களை (Shotgun) அரசு திரும்பப்பெற முயன்றபோது காண்டீபனின் கட்டளைக்கமைய பால்ராஜும் ஏனையோரும் அவற்றைப் பறித்து எடுத்தனர்.

24.12.1984 அன்று ஒரு உழுபொறியில் புதிய போராளிகளோடு 50 சொட்கண்களை ஏற்றிப் புதுக்குடியிருப்பிலிருந்து முழங்காவிலிற்கு அவற்றை நகர்த்தும் பணியைக் காண்டீபனுடன் இணைந்து வெள்ளை, இடிஅமீன், பால்ராஜ் ஆகியோர் மேற்கொண்டனர். உழுபொறி ஒதியமலை வழியே சென்றபோது சிங்களப் படையின் பதுங்கித் தாக்குதலுக்குள்ளானது. இந்தத் தாக்குதலின்போது பால்ராஜ்

விழுப்புண்ணடைந்தார். காசனும் இன்னுமொருவரும் உயிர் தப்பினர். விழுப்புண்ணடைந்த பால்ராஜ் சிகிச்சைக்காகத் தமிழ்நாடு சென்றார். அங்கு அவர் 09 ஆவது பயிற்சிப் பாசறையில் பயிற்சி பெற்றார்.

பயிற்சி முடிந்து இங்கு வந்த பால்ராஜ் இங்கிருந்த போராளிகள் அணியொன்றுக்குச் சமையல் செய்து உணவு வழங்கும் பணியை மேற்கொண்டார். அவ்வப்போது உணவுக்காக நெருப்புக்குச்சி மருந்தைப் பயன்படுத்தி காட்டிரஜ் கட்டி வேட்டையாடியும் வந்தார். இவரது நல்ல பணியைப் பார்த்து லெப். கேணல் அப்பையா அப்போது அவரிடமிருந்த வெடிபொருட்கள் காக்கும் பணியை இவரிடம் ஒப்படைத்தார். அங்கு குவிந்திருந்த காட்டிரஜ்களை கண்ட பால்ராஜ் அவ்வப்போது அவற்றைப் பயன்படுத்தி வேட்டையாடினார். நெருப்புக்குச்சிகளைக் கேட்காமல் இவன் எப்படி வேட்டையாடுகிறான் எனக் குழம்பிய அப்பையா அண்ணர் உண்மையைக் கண்டறிந்ததும் கடுங்கோபமடைந்து தனக்குக் கடுமையான தண்டனை தரவேண்டும் எனக் கூறியதாகப் பின்னாளில் பால்ராஜ் அவர்கள் அந்த நிகழ்ச்சியை அவருக்கே உரிய சிரிப்புடன் கூறுவதுண்டு.

இந்தக் காலப்பகுதியில் தமிழ்நாட்டில் தலைவரின் மெய்க்காவல் அணியிலிருந்த பசீலன் இங்கு வந்து சேர்ந்தார். அவர் பால்ராஜை அடையாளங்கண்டு தன்னோடு தனது மெய்காவலர் போன்று வைத்துக் கொண்டார். சமைத்துக் கொண்டிருந்த தன்னோடு பேசிய பின்பு ஏறு உந்துருளியில் எனத் தன்னை அழைத்துக்கொண்டு கிளிநொச்சிக்குச் சென்ற பசீலன் அங்கிருந்த சிங்களப் பாசறையின் வேலி அருகே சென்று நின்று மிகுந்த துணிச்சலுடன் வேவு பார்த்த நிகழ்ச்சியை பசீலனின் துணிச்சல் குறித்துப் பேசும்போது பால்ராஜ் நினைவுகூர்வதுண்டு.





பசீலனின் தலைமையில் முந்திரிகைக்குளத்தில் சிங்களக் குடியேற்ற முயற்சியில் ஈடுபட்ட சிங்களப் படையினர் மீது நடத்தப்பட்ட தாக்குதல் அந்தக் காலத்தில் இடம்பெற்ற மிகப் பெரிய தாக்குதல்களில் ஒன்றாகும். இந்தத் தாக்குதலின்போது 13 ஏ. கே சுடுகலன்கள் கைப்பற்றப்பட்டன. இதன்போது ஒரு படையினர் மட்டும் ஒரு பள்ளத்தில் நிலையெடுத்து குனிவதும் நிமிர்வதுமாகச் சுட்டுக் கொண்டிருந்தான். அவனைச் சுடு எனப் பசீலன் கட்டளையிட அந்தப் படையினன் குனிந்து நிமிரும் விநாடிக்குள் பாய்ந்து சென்று பால்ராஜ் அவனைச் சுட்டுக் கொன்றார்.

காடும் காடு சார்ந்த வாழ்வும் வேட்டையாடும் இயல்பும் சிங்களவரின் கொடுமையால் ஏற்பட்ட வன்மமும், முதலில் பசீலனினதும் பின்னர் தேசியத் தலைவரினதும் நேரடி வழிகாட்டலும் பால்ராஜை ஒரு மாபெரும் வீரனாக்கியது. தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் இக்கட்டான சூழ்நிலைகளில் அந்த சூழலை மாற்றி அமைத்த அணிகளின் தளபதியாக அவர் இருந்தார்.

இந்தியப் படையின் வருகையின் பின்பு மணலாற்றில் தலைவர் நிலைகொண்டிருந்த போது பால்ராஜுக்கும் தலைவருக்குமான அறிமுகம் ஏற்பட்டது. பால்ராஜின் ஆற்றலைத் தலைவர் அடையாளங்கண்டு முதலில் அவரை முல்லை மாவட்டத்தின் தளபதியாக்கினார். பின்னர் வன்னி மாவட்டத் தளபதியாக்கினார்.

1200 பேர் கொண்ட தாக்குதல், 300 பேர் கொண்ட கனவகைப் படைக்கல அணி ஆகியவற்றை உள்ளடக்கி 10.04.1991-இல் உருவாக்கப்பட்ட முதலாவது மரபுவழிப் படையணியான சாள்ஸ் அன்ரனிப் படைப்பிரிவின் தளபதியானார்.

வன்னிவிக்கிரம 02 எதிர் நடவடிக்கை, வன்னி விக்கிரம 03, ஆ.க.வெ சமர், பலகேய 03, மின்னல், யாழ்தேவி, ஜெயசிக்குறு, ஓயாத அலைகள் 01, 02, 03 என அவர் கலந்துகொண்ட பெருஞ்சமர்கள் பல உண்டு.

கரந்தடிப் படைவீரனாக அவர் பங்குகொண்ட தாக்குதல்கள் பலவாகும். இந்தியப் படை இங்கிருந்தவேளை முல்லைத்தீவு மாவட்டத்திலேயே கூடுதலாக ஏறத்தாழ 400 படைக்கலங்கள் இந்தியப் படையிடமிருந்து பறித்தெடுக்கப்பட்டன.

பிரிகேடியர் பால்ராஜின் ஆற்றலை வெளிச்சம் போட்டுக் காட்டிய சமர் இத்தாவில் பெட்டிச் சமராகும். ராசசிங்கம், கோபித், பல்லவன், யாழினி, துர்க்கா, றோய், இளங்கீரன், நேசன் போன்ற தளபதிகள் உள்ளேயும் சூசை, பானு, ராஜு, தீபன், அக்பர் போன்ற தளபதிகள் வெளியேயும் இருந்து ஆதரவு தர நடத்தப்பட்ட இந்தச் சமரின் அச்சாணியாக இருந்தவர் பிரிகேடியர் பால்ராஜ் அவர்களே.

இந்தப் பணி இவனால் தான் முடியும் எனத் தீர்மானித்து தலைவர் அவர்களால் இத்தாவில் பெட்டிச் சமரை வழிநடத்தும் பொறுப்பு அவரிடம் தரப்பட்டது.

02.03.2008 அன்று சிங்களப்படை கண்டல் பகுதியால் ராங்கிகளோடு உள்ளே நுழைந்த போது பிரிகேடியர் பால்ராஜை உயிரோடு பிடிப்போம் அல்லது சவமாக எடுப்போம் எனக் கொக்கரித்தது. அவர் தலைமையில் நின்ற அணியின் வீரமிகு போராலும் பின்புலத்திலிருந்த ஆட்டிலறி மோட்டார்களின் சூட்டாதரவாலும் சிங்களப்படை நிலைகுலைய அவரை ராங்கியில் தேடி வந்த சிங்களப்படை அவரருகே 20, 30 மீற்றரில் நின்று கொண்டு எப்படித் தப்பிச் செல்வது எனத் தெரியாது சிதைவுண்டு, அழிவுண்டு தப்பியோடியதை யாரும் மறக்க முடியாது.

எதிரியின் பெரிய அளவிலான மோட்டார் ஆட்டிலறித் தாக்குதல்களுக்கு இடையே ராங்கிகள் உள்நுழைந்து அவருக்கு அருகே நின்ற குழுவில் விழுப்புண்ணடைந்தோரைத் தூக்க உதவிய வண்ணம், கட்டளையைத் தளர்வின்றி வழங்கிய வண்ணம் 'புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்' எனக் குரலெழுப்பி வீரர்களுக்கு உற்சாகமூட்டி அசையாது, குலையாது அதாவது இடுக்கணழியாது வெற்றி அல்லது வீரச்சாவு என ஓர்மத்துடன் பிரிகேடியர் பால்ராஜ் நின்றார்.



இதன்பின் 10.04.2003 அன்று 53 டிவிசனின் முழுப் பிரிகேட்டும் (4500 பேர்) ஏ-9 வீதியைத் திறக்க ஒருங்கிணைந்து மேற்கொண்ட முயற்சியும் இவர் தலைமையிலான அணியால் முறியடிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகள் இவ்வாறு வீரத்திற்குக் குறியீடாக வாழ்ந்த அடங்காப்பற்றின் மைந்தனை, தமிழீழ விடுதலைப் புலியை நினைவுகூரும் இந்நாளில் தமிழீழத்தை வென்றெடுத்து அந்த வீரன் பிறந்த கொக்குத்தொடுவாயில் அவனுக்கு நினைவுக்கல் எடுப்போமென உறுதியெடுப்போம்.





பால்ராஜ் அவர்கள் சுகயீனம் காரணமாக வீரச்சாவைத் தழுவிக்கொண்டார். இந்தச் செய்தி வெளியே வந்தபொழுது தமிழீழப் பரப்பெங்கும் மக்களுடைய மனங்களிலே மிகவும் ஒரு சோகமான நிலைமை. ஏனென்றால் பெரும்பாலும் பிரிகேடியர் பால்ராஜ் அவர்களை முழுமையாக தெரிந்த மக்களாகத்தான் இருக்கின்றார்கள். அவரை நேரடியாக பார்க்காதவர்கள் கூட அவருடைய செயற்பாடுகளை நிறைய அறிந்திருக்கிறார்கள். அனைவருடைய மனங்களிலேயும் பெரும் தளபதியை, பெரும் வீரனை இழந்துவிட்ட சோகம் உருவாகி இருக்கிறது.

பிரிகேடியர் பால்ராஜ் அவர்கள் இந்த விடுதலைப் போராட்டத்தில் மிகப் பெரும் வியத்தகும் வீரனாக நின்று உழைத்த ஒரு மனிதர். தன்னை முழுமையாக இந்த விடுதலைப் போராட்டத்திற்குள்ளே அர்ப்பணித்து இந்த விடுதலையின் நெருக்கடியான காலகட்டங்களிலே அந்த நெருக்கடிகளையெல்லாம் உடைப்பதற்காக பெரும் சாதனைகளை புரிந்த ஒரு மாபெரும் வீரன். அவருடைய ஒவ்வொரு காலகட்டமும், அவருடைய நடவடிக்கைகளின் ஒவ்வொரு காலகட்டங்களிலேயும் இந்த விடுதலைப்

# பிரிகேடியர் பால்ராஜ்: நெருக்கடிகளை உடைத்தெறிந்த பெரும் சாதனையாளன்

- கொள்கை முன்னெடுப்புப் பிரிவுப் பொறுப்பாளர் எழிலன் -

போராட்டம் பெரும் வெற்றிகளை சந்தித்திருக்கின்றது. அந்த வெற்றிகளுக்கூடாக இந்த விடுதலைப் போராட்டம் நெருக்கடிகளிலே இருந்து விடுபடுவதற்கான சந்தர்ப்பங்கள் கிடைத்தன. அவருடைய அரவணைப்பு நடவடிக்கைகளின் போதெல்லாம் அவருடைய அரவணைப்பு எப்பொழுதுமே போராளிகளிடமும் மக்களிடமும் மறக்க முடியாத ஒரு சம்பவங்களாகத்தான் இருக்கும்.

போராளிகளைப் பொறுத்தவரையிலே, அவர் மிகுந்த அரவணைப்போடு, இந்த விடுதலையை, தலைமையை நேசிக்கவேண்டும் என்கின்ற விடயங்கள் தொடர்ந்து சொல்லப்படுகின்ற செய்திகளாகவே இருக்கும். அவற்றினூடாக இந்த விடுதலையை நேசிக்கின்ற போராளிகளாகவும் விடுதலைப் பற்றோடு தங்களை அர்ப்பணிக்கின்ற போராளிகளாகவும் நிறையப்பேரை அவர் வளர்த்தெடுத்திருந்தார். அவருடைய கடந்த கால செயற்பாடுகளிலே விடுதலைக்காக உழைத்த பெரும் சமர்கள், மிகப் பெரும் சமர்கள் பல இருந்தன. ஆகாய கடல் வெளி சமரைப் பொறுத்தவரையிலே அன்றைய காலப் பகுதிகளிலே அந்த ஆனையிறவை கைப்பற்றுவதற்கான நடவடிக்கைகளிலே நாங்கள் இறங்கிய பொழுது, அந்தப் பெரும் சமரை நின்று ஒழுங்குபடுத்தி அதை நடத்திய தளபதிகளில் ஒருவராக நின்று தன்னுடைய பணியை சிறப்பாக செய்து இருந்தார். ஆனால், அந்தக் காலப்பகுதிகளிலே அதைக் கைப்பற்ற முடியாமல் போனதையிட்டு அவருடைய மனதிலே திடமான ஒரு உணர்வு இருந்தது. இந்த ஆனையிறவை நாங்கள் கைப்பற்றியே ஆகவேண்டும் என்கின்ற உணர்வு அவரிடம் இருந்தது.





அதேபோல, அவர் எதிர்பார்த்தது போல அமைந்த ஆனையிறவை கைப்பற்றுவதற்கான பெருஞ்சமரில், குடாரப்பு பகுதிகளிலே தரையிறக்கம் செய்யப்பட்டு, ஊடறுத்துச் சென்று, அந்தப்பகுதிகளிலே நின்று தாக்குதல் நடத்தி அவர்களுடைய மின்னுபகரணங்களை தடைசெய்ய வேண்டும் என்கின்ற ஒரு பொறுப்பு அவருக்கு கொடுக்கப்பட்டிருந்தது. மிகவும் நெருக்கடியான சூழலைக் கொண்ட பிரதேசமாக அது இருந்தது. ஏற்கனவே காலிலே பட்ட காயத்தினால், முழுமையாக நடந்து செல்வது கூட கடினமாக இருந்த நிலையிலும் தலைவரின் கட்டளைக்கிணங்க முழு விருப்போடு குறிக்கப்பட்ட போராளிகளோடு தரையிறக்கம் செய்து, எதிரியினுடைய பெரும்தொகை படைகளுக்கூடாக ஊடறுத்துச் சென்று, 'நான் திரும்பி இந்த ஏ- 9 வீதியாலேதான் வந்து உங்களைச் சந்திப்பேன்' என்று சொல்லிவிட்டுச் சென்றதைப் போலவே, அந்த வீதியைக் குறுக்கறுத்து அவர்களுடைய நிலையங்களை தடைசெய்து, ஆனையிறவை நாங்கள் வெற்றி கொண்ட பொழுது, அந்த வீதியினாலேயே வந்து எங்களை சந்தித்து இருந்தார்.

அதேபோன்று, யாழ்ப்பாணத்திலே இருந்து நாம் இடம்பெயர்ந்து வந்திருந்த நேரம், தமிழீழ விடுதலைப் புலிகள் 90 வீதமான பலத்தை இழந்து விட்டார்கள், இன்னும் 10 வீதம்தான் இருக்கிறது என்று சொன்னவர்களின் எண்ணங்களைப் பொய்யாக்கிய முல்லைத்தீவு முகாமை தாக்கியழிக்கின்ற நடவடிக்கையிலே விடுதலைப் புலிகள் ஈடுபட்ட பொழுது அதனை முன் நின்று செயற்பட்ட தளபதிகளிலே ஒருவராக நின்று, அந்த பெரும் வெற்றியை எங்களுக்கு பெற்றுத்தருவதற்கான நடவடிக்கையிலே ஈடுபட்டிருந்தார்.

அதேபோன்று விடுதலைப்புலிகளுடைய பலத்தை வெளியே கொண்டுவந்த மாங்குளம் இராணுவ முகாம் தகர்ப்பிலே தன்னுடைய அனைத்து நடவடிக்கைகளையும் செயல்படுத்தி, வழிநடத்தி, பெரும் வெற்றியை பெற்றுத் தருகின்ற நடவடிக்கையாக எங்களுக்கு மாற்றித் தந்திருந்தார்.



இப்படியாக அவருடைய ஒவ்வொரு தாக்குதல் நடவடிக்கைகளும் களமுனைகளிலும் எங்களுக்கு மிகப் பெரும் வெற்றிகளை ஈட்டித்தந்த சமர்களாகவே இருந்தன. ஒரு விடுதலை வீரன் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு உதாரணமாக தன்னுடைய செயற்பாடுகளை அவர் செய்து கொண்டு இருப்பார். மிகவும் எளிமையாக, எல்லோரோடும் அன்பாக பழகுகின்ற, எல்லோரையும் அரவணைக்கின்ற, மக்கள் மீது மிகவும் நேயம் கொண்டவராக வாழ்ந்தார். எங்களுடைய படைநடவடிக்கைளிலே தான் போகின்ற இடங்களிலே மக்கள் படுகின்ற துன்பங்களை அறிந்து விட்டு அவற்றை எப்படி சீர்செய்ய வேண்டும், அந்த மக்களை நாங்கள் எப்படி ஒழுங்கு படுத்தவேண்டும் என்கின்ற விடயங்களை கூட எங்களோடு வந்து கதைத்துக்கொள்ளுவார். அப்படியாக ஒரு மிகப் பெரும் பண்பாளனாக, மிகப்பெரும் தளபதியாக, மிகப் பெரும் வீரனாக, தலைவரின் அன்பைப்பெற்ற ஒரு படைத்தளபதியாக, அவர் தன்னுடைய பணிகளை இவ்வளவு காலமும் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார்.

சுகவீனம் அவரை தொடர்ந்து வாட்டியபடியே இருந்தது. கடந்த காலங்களிலே அவருக்கு ஏற்பட்டிருந்த அந்த சுகவீனம் காரணமாக, பல தடவைகள் அவர் வைத்தியசாலைகளிலே சிகிச்சைபெற வேண்டிய நிலைப்பாடுகள் இருந்தன. அந்த வேதனைகளை கூட அவர் ஒரு பொழுதும் வெளியே காட்டிக்கொள்வது கிடையாது. அவருடைய அந்த சுகவீனம் அவரை வாட்டுகின்ற பொழுது கூட அதைப் பொருட்படுத்தாது இந்த தேசத்தின் தேவை என்ன இருக்கின்றதோ அதை செய்ய வேண்டும் என்ற அந்த மன உணர்வோடுதான் அவருடைய செயற்பாடுகள் தொடர்ந்தும் இருந்தன. இன்று அவருடைய இழப்பு என்பது தமிழீழ விடுதலைப் போராட்டத்திற்கு பெரும் இழப்பாகவே இருக்கிறது.

# எமைவிட்டுப் போனதேன்?

மணலாற்றுக் களமதில் - பசீலனுடன்
பகைமேல் பாய்ந்த புலியே
கொக்குத்தொடுவாய் எமக்குக்
கொணர்ந்துதந்த கோவே
உன்குரலில் பகையினை
குலைநடுங்க வைத்த
மட்டற்ற வீரனே - பால்ராஜ் அண்ணா
உம் வீறுநடை வெற்றிபல தருமென
நாம் பார்த்திருக்க
விழிமூடிப் போனதேனோ!

ஓயாத அலையாய் - பகைமேல்
ஓங்கியடித்த ஓர்மத்தீயே
இத்தாவிலில் இறங்கி - பகைமேல்
இடிபொளிந்த ஈழவனே





பால்ராஜ் அண்ணா
அலைகளாகப் பகைமேல் பாய்வாய்
என நாம் பார்த்திருக்க - நீ
கண்ணீரில் எமை கலங்கவிட்டுப்
போனதேனோ!

எம் தலைவன் - உன்
திறன்கண்டு வளர்த்திட்ட
தீரமிகு தளபதியே - நீ
உருவாக்கிவிட்ட உறவுகள்
உன் கட்டளைக்காய்க் காத்திருக்க
பால்ராஜ் அண்ணா - நீ
எமைக் கைவிட்டுச் சென்றதேனோ!

அச்சத்தின் எதிர்ப்பொருளே
கட்டளையின் ராஜாவே
கரிகாலன் சொல்லின் செயல்வடிவே
உம் வீர நடைக்காக எம் விழிகள்
ஏங்கியிருக்க - நீர்
எமைவிட்டுப் போனதேனோ!

உம் வீரமரணச் செய்தியில் - எம்
விழிகள் ஈரமண்ணா
கொடியவன் கொல்லமுடியா உனை - அக்
கொடிய நோய் எப்படிக் கொன்றது?
பால்ராஜ் அண்ணா
உமக்காக ஏங்கும் - உம்
உலகத் தமிழினத்திற்காக - ஒருமுறை
எழுந்து வாருங்கள் அண்ணா!



- போராளி இ.நக்கீரன் -







## தாயக கவிஞர்
## புதுவை இரத்தினதுரை

*என்னால் முடியாது!*
*இவனை நான் எழுதுதற்கு கண்ணால் வழிவதை*
*என் கை துடைக்க முடியாது!*
*இருபது வருட தோழமை என்பதால் அறிவேன்*
*நான் இந்த அதிமாடனை.*
*இவன் கால் நூற்றாண்டுக் கவிதை*
*ஒரு நதியின் பயணம் என நகர்ந்துள்ளான் இந்த வெளி எங்கும்*
*எடுத்து விரிக்கும் பங்கங்களில் எல்லாம் இருக்கிறது இவனின் சுவடுகள்*
*இன்று எதிர்பாராது இடி விழுந்தது நெஞ்சில்*
*விதிர் விதிர்த்துப் போனோம்!*
*மாரடைப்புக்கும் ஒரு வரன்முறை கிடையாதா?*
*எவர் எவரை எடுத்துச் செல்வது என்று எங்கள் கூட்டின்*

இராஜாளிப் பறவையை காலனால் எப்படி கவர முடிந்தது.
எமன் வந்த நேரத்தில் இவன் அயர்ந்து தூங்கியிருக்க வேண்டும்
இல்லையெனில் உயிர் கவர இயலாது அவனால்
தலைவன் வளர்த்த நாற்று மேடையின் நம்பிக்கைக் கொடி
இப்படி வேர் அறுந்து போகும் என எவர் நினைத்தார்.
பிரிகேடியர் பால்ராஜ்
இவனை முன்னிறுத்தி பின்நோக்கி விரிக்கிறேன் நினைவுகளை
எடுக்க எடுக்க தீராது வருகிறது இவன் தொடுத்த சாதனை சரம்
பாரதப் படைகளை நாங்கள் வேர் அறுத்த காலத்தில்
பத்ம வியூகம் உடைத்த ஓர்மம்
மாங்குளப் படைமுகாம் தகர்த்து
அங்கே எடுத்து தரித்த மகுடம்
ஆனையிறவுக் கதவின் அகலத் திறப்பு!
ஓயாத அலைகள் ஒவ்வொன்றிலும் மிதேறிச்சென்று பகை சரித்த வீரம்
கடல் ஏறிச் சென்று தரை மீட்டுவந்த சாதனை!
எத்தனை களங்கள் எத்தனை விழுப்புண்கள்
எத்தனை சாதனைத் தடங்கள் எல்லாம் கிடக்கின்றன சுவடுகளாக
இவன் மட்டும் இல்லை என்றானான் இப்போது
நேற்றுவரை நின்ற நெடுமலை என்ற அவனை தோற்றோமா?
ஒரு கனவாய் துவைத்தோமா?
புயல் என வீசிநின்ற காற்றை விட்டோமா கை நழுவ
பேசிச் சிரித்திருந்த பெரு வீரர் எமை விட்டு போனானே!
இப்போ நாம் பேச்சு இழந்து போனோமே
வாழ் நாள் முழுவதையுமே வரலாறாய் ஆக்கியவன்
நோயில் சரிந்தானே நொடிப்பொழுதில் கரைந்தானே
ஆல மரம் சரிய அதைப் பார்த்து நின்றதுபோல்
காவலன் நடந்து வர கை கட்டிக் கொண்டோமே
முந்தைத் தமிழ் வீரம் முளைத்தது என வந்து எழுந்த எங்கள் பெரு வீரன்
இனி இல்லை என்றானே
அருச்சுணனின் பிள்ளை அபிமன்யுபோல்
எங்கள் பெரும் தலைவன் வளர்த்த பிள்ளை இவன் போனானே
இருந்தால் ஒரு அழகு எழுந்து நின்றால் வேறழகு
நடந்தால் ஒரு அழகு
நாற்றிசையால் பகை வரினும் சிரிக்கும் அழகு இருக்கே
அதுதீராத பேரழகாய் விரித்த பெரு வெளியே
வெற்றிடமாய் போனதம்மா இவன் காண்டிபம் தரித்த பொழுதுகளில்
பகை நடுங்கி பதறியது குரல் கேட்ட எதிரி குற்றுயிர் ஆனான்.
இவன் வழிமறித்த வாசல்களை மீறி எவனும் எழுந்து வந்தது இல்லை







இதுவரையும்
விழுப்புண் தாங்கி விழுந்த பொழுதுகளும்
களமுனையைத்தான் இவன் கருத்தில் எடுத்தான்
எம் மண்ணைத் துண்டாட நினைத்துப் பகை வந்த நேரத்தில்
பண்டார வன்னியனையே பார்த்தோம் இவன் வடிவில்
நந்திக்கடலில் நாச்சியார் எறிந்த சலங்கையும் வாளையும்
மீட்டெடுத்தான் எங்கள் பெரும் தலைவன்
எடுத்த வாளை இவனிடமே கொடுத்து பகை விழுங்கி வாவென்று பரிசளித்தான்
செய்து முடித்தான் இந்த செகராசசேகரன்
இவன் அகாலமாகப் போகவில்லை இந்த அற்புதன்
பலரில் தன்னை பதியமிட்டேசென்றுள்ளான்
அவர்கள் தொடர்வார்கள் மீதிப் பயணத்தை
இவனை எழுத நினைத்தாலே போதும் பேனா தானாகவே எழுந்துகொள்கிறது
பேச நினைத்தாலே போதும் வார்த்தைகள் தானாகவே வரிசைகொள்கின்றன
இவன் படை நடத்திய அழகை நான் பார்த்தது இல்லை கேட்டதுமட்டுமே!
வந்து சொன்னவர் முகத்தில் எத்தனை பிரகாசம்
என்னே இவன் வீரம் என்று
சாட்சிசொல்ல இருக்கிறது முகமாலை
சான்றாக கிடக்கிறது மாங்குளம்
என்னை ஏன் மறந்தாய் எனக் கேட்கிறது ஆனையிறவு
வீரர்கள் விழுவதில்லை
ஆற்றலர்கள் அழிவதில்லை
ஆயின் இவனும் அழியமாட்டான்
நேரில் இருந்தான் நேற்றுவரை
இனிவேற்று இருப்பான் எம் தேசம் விடியும் வரை
காலம் எழுதிவைக்கும் கணக்கில்
பால்ராஜ் வரவுக் கணக்காகவே வாழ்வான்
வீரம் எல்லோரிலும் விளைவதில்லை
நெருப்பு பச்சை விறகில் பற்றுவதில்லை
வீரமும் நெருப்பும் இவனில் விளைந்தன
தலைவன் சரியாக இனம் கண்டதால்
இவன் விசாளித்த மரமாகி விழுதாகினான்
இனிய தோழனே!
உன்னை நினைத்து நினைத்து உருகுகின்றோம்
வந்து எம் கிளையில் வாழ்ந்து விட்டு போகிறாய்
பெருகி நதி வழியும் காலத்தில்
படை நடத்திவிட்டு பாதியில் போகின்றாய்
கடை திறவு பாடும் காலத்தில் ராஜதந்திரத்தை இழந்தோம்

தேசத்தின்குரல் விடைபெற்றபோது
சிரிப்பின் சிறகை இழந்தோம்
தமிழ்ச் செல்வன் மீது இடி இறங்கிய போது
சாதனையின் சாம்ராச்சியத்தை இழந்தோம்
சாவுக்கு சாள்ஸ்சை கொடுத்தபோது
இன்று வீரத்தின் விழுதொன்றையும் இழந்தோம்
உன்னைத்தொலைத்து நிற்கும்நேரத்தில்
அண்மைக் காலக் கணக்கு மட்டுமே இது
நீங்கள் மட்டுமல்ல வரிசை இன்னும் நீழ்கிறது
விடுதலைக்காக வீழும் ஒவ்வொரு விதைகளும் உயிர்பெற்றெழுகின்றன உதயத்தில்
அன்று தொட்டு இன்று வரை ஆயிரம் ஆயிரம் வீரர்களை அள்ளிக்கொடுத்து விட்டோம்
ஆயினும் தளரோம் நாம்
ஆயினும் தளரோம் நாம்
தலைவர் இருக்கிறான் என்ற நம்பிக்கையில்
உங்களுக்கு என்ன ஒரு புன்னகையுடன் போய் விடுகின்றீர்கள்
இருப்பவர்களுக்கே தெரியும் வதை
எழுதுபவர்களுக்கே தெரியும் வலி
சாவிழும் ஒவ்வொரு தருணத்திலும் செத்து விடலாமா என்று தோன்றுகிறது
விடுதலையும் பாடி விடவேண்டும் என்ற பெரு விருப்பில்
வாழ வேண்டும் என்று வருகிறது ஆசை
மாறி மாறி அல்லாடுகிறது மனம்
தோழனே நீயும் போய் விட்டாய்!
நாளை யாரென்று யார் அறிவார்!
நோய் தின்று போவதெனில் நாளை நானாகவும் இருக்கலாம்
இன்று உன் வித்துடல் மீது நாங்கள் ஒரு சத்தியம் பறைகின்றோம்
உன்னாலும் உயிர்ப்புற்ற விடுதலை வழித்தடத்திலும்
எம் பயணம் தொடரும்
பாதி வழியில் எங்கள் பாதைகள் வளையாது
நீ நம்பிய தலைவனையே நாங்களும் நம்புகின்றோம்
சாவுக்கு அஞ்சினோம் வழியில் தள்ளாடினோம்
வீசும் மயக்க வாசனைகளில் அள்ளுண்டோம்
நாங்கள் திசை மாறப்போவதில்லை
நீ சுமந்த அஸ்திரங்கள் இனி மேலதிகமாக மற்ற தளபதிகளிடம்
நீ வரித்த கனவுகள் உன்னால் வளர்த்தெடுத்த மற்றத் தோழர்களிடம்
நீ நெஞ்சில் உருப்போட்ட நம்பிக்கை
அதை உனக்கே கையளித்த தலைவனிடம்
எந்த மாநீசமும் அற்று கிடக்கிறது விடுதலை வெளி
உன் சாவு எதிரிகளை சந்தோசப்படுத்தலாம்









*கொண்டாடவும் செய்யலாம் அவர்களுக்கு ஒன்று புரிவதே இல்லை*
*நீ தனி மனிதன் அல்ல என்பது*
*நாங்கள் சாம்பலில் உயிர்க்கும் பீனிச் பறவைகள்*
*உன்னை விதைக்கும் கல்லறைக்குள்ளும் நீ விழித்தேயிருப்பாய்*
*நாங்கள் தரும் நல்ல செய்திகளுக்காக*
*விரைவில் அறிவாய் தோழனே!*
*நாங்கள் வென்றோம் எனும் செய்தியை*
*எம்மை சுமந்தாய் தோழ்களில் இதுநாள் வரையும்*
*இனி உன்னைச் சுமப்போம் நெஞ்சில் நினைவுகளாக*
*உலகெங்கும் அறியப்பட்ட தமிழரில்*
*முன் வரிசையில் தான் நீ முகம் காட்டுகிறாய்*
*பழுத்திருந்த தமிழரின் வீரம் பதுக்கி பயணித்த வீரன் நீ*
*நேற்று உயிராய்*
*இன்று வித்துடலாய்*
*நாளை நினைவுகளாய்*
*இருந்தாய்*
*இருக்கிறாய்*
*இருப்பாய் என் தோழனே!*
*பிரிய மனமின்றி கையசைக்கின்றோம்*
*போய் வருக.*





# விதையாய் விழுந்தவனே! விடியலாய் முளைப்பாயோ?

- தமிழகத்திலிருந்து ம.தி.மு.க. தலைவர் வை.கோ -

## மாவீரனே வீரவணக்கம்!

தமிழ் ஈழ விடுதலைப்புலிகளின் முதல் வரிசைத் தளகர்த்தர்களுள் ஒருவரான பிரிகேடியர் பால்ராஜ் மறைந்தார் என்ற செய்தியை அறிந்த மாத்திரத்தில் ஒருகணம் அதிர்ச்சியிலும், துக்கத்திலும் என் உள்ளம் உறைந்தது.



மாவீரர் பால்ராஜ் என்ற பெயரை உச்சரித்தாலே களத்தில் நிற்கும் வேங்கைகளின் நரம்புகளில் மின்சாரம் பாயும். பால்ராஜின் ஒரு கட்டளை முழக்கம் கேட்டால் போதும், பகைவர் படை அணி பல மடங்கு இருப்பினும், சரம் சரமாகக் குண்டுகள் சீறி வந்தாலும், அவற்றை எதிர்கொண்டு எதிரிகள் முகாமைச் சின்னாபின்னம் ஆக்குவர் விடுதலைப்புலிகள். பெருந்தொகை கொண்ட சிங்கள இராணுவத்தினரை, குறைந்த எண்ணிக்கை உள்ள



வேங்கைகளைக் கொண்டு பலமாகத் தாக்கி வீழ்த்தி பலமுறை புறமுதுகிட்டு ஓடச்செய்த வீரத்திலகம்தான் பிரிகேடியர் பால்ராஜ்.

1989 ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் 23 ஆம் தேதி இயக்கத்தின் முன்னணித் தளபதிகளை என்னிடம் விடுதலை வேங்கைகளின் தலைவர் பிரபாகரன் அவர்கள் அறிமுகம் செய்துவைத்தபோது, அவர்களுள் முக்கியமானவர் பிரிகேடியர் பால்ராஜ். குத்திக்கிழிக்கும் கூரிய முள்மரங்கள் அடர்ந்த காடுகளின் வழியாகச் செல்கையில், எந்தநேரத்திலும் இருநாட்டு இராணுவமும் தாக்குகின்ற அபாயத்தின் ஊடே என்னைப் பாதுகாப்பாக அனுப்பிவைக்க வேண்டும் என்பதற்காகத் தேர்ந்து எடுத்து உடன் அனுப்பி வைத்த வீரர்களில் சிலர் அதன்பின் நடைபெற்ற சமர்களில் வீரமரணம் எய்தினர். முக்கியத் தளபதிகள் பல சமர்களில் சாகச வெற்றிகளைக் குவித்து உள்ளனர்.

மூன்று நாட்கள் தொடர்ந்து வன்னிக்காடுகள் ஊடே நடக்கையில் கிளிநொச்சிக்குச் செல்லும் சாலையை நாங்கள் கடக்க நேர்கையில், இராணுவத்தினர் அவ்வழி வருவதை அறிந்து, அருகில் காட்டுக்குள்ளே நாங்கள் பதுங்க நேர்ந்தது. அப்பொழுது பல மணி நேரம் பால்ராஜ் அவர்களுடன் உரையாடுகின்ற வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவருடைய உடலில் குண்டுகள் பாயாத இடமே இல்லை. பலமுறை படுகாயமுற்று, அதில் இருந்து மீண்டு, களங்களில் படை நடத்தி உள்ளார். ஒவ்வொரு சண்டையிலும் அவருக்கு நேர்ந்த மயிர்க்கூச்செறியும் அனுபவங்களை அவர் சொல்லக்கேட்டு மெய்சிலிர்த்துப் போனேன். என் பாதுகாப்புக்காக உடன் வந்த புலிப்படைத் தம்பிகள், தளபதி பால்ராஜ் மீது கொண்டு இருக்கிற பாசம் விசுவாசத்தையும், மதிப்பையும் அவர்கள் சொல்லச் சொல்லக் கேட்டுப் பிரமித்துப் போனேன்.



25ஆம் தேதி இரவு பத்து மணி அளவில், பேசாலைப் பகுதியில், கடற்கரை மணலில் என்னைப் படகில் ஏற்றி விடைகொடுத்து அனுப்புவதற்குமுன்பு, பால்ராஜ் அவர்களைக் கட்டித்தழுவிக் கொண்டேன்.

அவரது காலணிகள் கிழிந்து போயிருந்ததால், என்னுடைய புதிய காலணிகளை நீங்கள் பயன்படுத்துங்கள் என்று கொடுத்தேன். அந்த இரவில் தொடுவாய் கடற்கரையில் நாங்கள் இறங்கத்திட்டமிட்டு இருந்ததால், மறுநாள் காலையில் 900-க்கும் மேற்பட்ட இராணுவ வீரர்கள் எங்களைச் சுற்றி வளைத்துத் தாக்குதல் நடத்தப்போவதும், சீறிப்பாய்ந்த குண்டுமழையில், மயிர் இழையில் நான் உயிர் தப்புவேன் என்பதும், என் உடன் வந்த வீரத்தம்பி சரத் என்ற பீட்டர் கென்னடி உடல் சல்லடைக்கண்களாகத் துளைக்கப்பட்டுக் கொல்லப்படுவான் என்பதையும் நான் கற்பனைகூடச் செய்யாத சூழலில் பால்ராஜிடம் இருந்து விடைபெற்றேன். அதன்பின்னர், கடந்த 19 ஆண்டுகளில், ஈழத்துப் பிள்ளைகளிடம் தொலைபேசியிலும், புலம்பெயர்ந்த நாடுகளிலும் நான் பேச நேரும்போதெல்லாம் பால்ராஜ் அவர்களைப் பற்றி விசாரிப்பேன். நலமாக இருக்கிறார். போர்க்களங்களில் சாதிக்கிறார் என்றே சொல்லி வந்தார்கள். ஆனால், அண்மையில் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அவர் இருதய அறுவைச் சிகிச்சை மேற்கொண்டதை அறிந்ததால், அண்மையில் நான் நார்வே சென்றபோது பால்ராஜ் அவர்களைப் பற்றி வினவினேன். நலமாக இருக்கிறார். என்றே சொன்னார்கள்.

நிகரற்ற அந்த ரணகளச் சூரன் மறைந்துவிட்டார். எந்தத் தாயக மண்ணின் விடுதலைக்காகப் போர்க்களத்தில் எதிரிகளைக் கதிகலங்கச் செய்தாரோ, அந்த மண்ணில், இதோ, அமைதியாக உறங்குகிறார். அவரது வீரமும், தியாகமும், தமிழ் ஈழ விடுதலை வரலாற்றில் பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட்டு விட்டன. இம்மாவீரர்கள் துயில்கின்ற தமிழ் ஈழ மண் விடுதலை பெற்று, சுதந்திர இறையாண்மை உள்ள நாடாக மலரும்போது, அந்த மண்ணிலே உறங்குகிற பால்ராஜின் உடலும் சிலிர்க்கத்தான் செய்யும்.



வாழ்க, மாவீரன் பிரிகேடியர் பால்ராஜின் புகழ் என்று என் மனம் மானசீகமாக முழங்கும் வேளையில் அம்மாவீரனின் கல்லறைக்கு தாய்த்தமிழகத்தில் இருந்து என் கண்ணீரைக் காணிக்கை ஆக்குகிறேன்.





# பிரிகேடியர் பால்ராஜ்:

# ஆன்ம வல்லமை கொண்ட ஆளுமையாளன்

- வண. பிதா ஜெகத் கஸ்பார் -

**வா**னம் அளந்து அனைத்தும் அளந்து, வானம் அறிந்து அனைத்தும் அறிந்து வளர்ந்து வாழ்கின்ற எம் தமிழ் மொழியின் வரலாறு எத்தனையோ மிகப் பெரிய வீரர்களைக் கண்டிருக்கின்றது. வீரர்களின் வீரத்தைப் போற்றுகின்றோம். போர்களை நாங்கள் விரும்புகிறவர்கள் அல்ல. போர்கள் இல்லாத எவ்வித சச்சரவுகள் இல்லாத சமாதான உலகமே எம் அனைவருடைய கனவாகவும் இருக்கின்றது. ஆனால், அந்த உலகம் வருகின்ற வரை, நீதி வருகின்ற வரை, நீதிக்காக, மனித உரிமைகளுக்கான, மனித

இருப்புக்கான போராட்டங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும். அக்கிரமங்களை, ஆக்கிரமிப்புக்களைச் செய்தவர்களை நாங்கள் வாழ்த்துவதும் இல்லை. வணங்குவதும் இல்லை.



ஆனால், ஒடுக்கப்படுகின்ற மக்கள் இனத்தினுடைய இருப்பிற்காக, அவர்களது வாழ்வாதார உரிமைகளுக்காக போராடுகின்றவர்களை, களம் நின்று தம்மையே ஆகுதி ஆக்குகின்றவர்களை மகத்தான வீரர்களாக நாம் பதிவு செய்கின்றோம். வரலாற்றில் வணங்கி வருகின்றோம்.

அவ்வகையில் தமிழ் கண்ட, வரலாற்றில் படித்தறிந்த மாவீரர்கள் சிலர் இருக்கின்றார்கள். நாம் நமது காலத்தில் கண்ட அப்படியான வீரர்களில் முதலானவராக தளபதி பால்ராஜ் அவர்களை வரலாற்றில் உங்களோடு இணைந்து நானும் பதிவு செய்யத் தலைப்படுகிறேன்.

இவர் பற்றி சிங்கள இராணுவ வட்டத்திலேயே உலவுகின்ற, பேசப்படுகின்ற இரண்டு அனுபவங்களை காது வழி கேட்டு அதை உங்களோடு பகிர்ந்துகொள்வதன் மூலம் அவருடைய ஆளுமையினுடைய ஆழமான தன்மையை உங்களோடு பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

அமைதிப் பேச்சுவார்த்தை தொடங்கிய பிறகு பால்ராஜ் அவர்கள் மருத்துவ தேவைக்காக சிங்கப்பூர் சென்று திரும்பி வருகின்ற பொழுது கொழும்பு விமான நிலையத்திலே அவருக்கொரு அனுபவம் காத்திருக்கிறது. அப்போது அமைதிப் பேச்சுவார்த்தைக் காலம் எனவே எவ்விதமான சதிகளையும் எவரும் எதிர்பார்க்கவில்லை.

பால்ராஜ் அவர்கள் கொழும்பு விமான நிலையத்தில் வந்து இறங்கியதும் இளம் சிங்கள இராணுவ தளபதிகள் ஒரு முப்பது முப்பத்தைந்து பேர் இராணுவ உடை அணிந்து பொதுவாக இராணுவ மரியாதை செலுத்துகின்ற அந்த தொப்பி யாவும் அணிந்து அவரைச் சூழ்ந்து கொள்கின்றார்கள்.



சதி நடந்து விட்டதோ! நம்மை ஒரு மரணவலையில் சிக்க வைத்து விட்டார்களோ! என்று ஒரு கணம் அச்சப்படுகிறார் பால்ராஜ்.



அப்பொழுது ஓர் இளம் சிங்களத் தளபதி அவரைப் பார்த்து 'பயப்படாதீர்கள், எங்களுக்கு குடாரப்பு தரையிறக்கத்திற்குப் பிறகு 40 நாட்களுக்கு மேலாய் அந்தப் பகுதியில் பெட்டிச் சண்டையை நடத்திய பால்ராஜைப் பார்க்க வேண்டுமென்பது வாழ்நாள் ஆசை. எங்கள் வாழ் நாளில் அந்தத் தளபதியை பார்க்க வேண்டுமென்பதை ஒரு கனவாக வைத்திருந்தோம். அதற்காகத்தான் ஒரு நிமிடம் உங்கள் முகத்தைப் பார்த்துவிட்டு போகலாம் என்று வந்தோம்' என்று சொல்கின்றான்.

எதிரிகளின் ஆர்த்மாத்தமான புரொப்னிசியஸ் அப்றினியஸ் என்று சொல்வோமே, அதி உச்ச தகுதி தமிழீழ விடுதலைப் போரில் அதிகம் பேருக்கு இருந்திருக்குமென்று நான் நினைக்கவில்லை.

அதே போன்று அவரைப் பற்றிய இன்னொரு அனுபவமும் உள்ளது. நான் முன் அனுபவத்தில் குறிப்பிட்ட அதே களம்தான். குடாரப்பில் தரையிறங்கிய பின் பளைப்பகுதியில் பளைக்கும் ஆனையிறவிற்கும் இடையில் ஏ-9 பாதையை இடைமறிக்கும் அந்தத் தீர்க்கமான முக்கியமான யுத்தத்தில் பெட்டிச் சண்டை நடக்கிறது.

அப்பொழுது ஆட்சியிலிருப்பது அம்மையார் சந்திரிகா அவர்கள். இராணுவ மமதை கொண்ட அமைச்சராக அனுரத்த ரத்வத்த. இங்கே களத்தில் சிங்களப் படைகளை வழி நடத்துகின்றவராக ஹெட்டியாராச்சி என்பவர் இருக்கிறார். ஹெட்டியாராச்சி அமெரிக்காவிலே படித்தவர். யுத்தத்தை மரபு ரீதியாக சட்ட திட்ட ரீதியாக விரும்புகின்றவர்.

2000-ஆம் ஆண்டு ஆனையிறவு தமிழீழப் படைகளினுடைய கட்டுப்பாட்டின் கீழ் வந்ததை நாம் அறிவோம். உலகெங்கும் நாம் அதைக் கொண்டாடினோம். ஆனால் ஆனையிறவிற்கான சண்டை ஆனையிறவில் நடக்கவில்லை. ஆனையிறவில் நடக்காத சண்டை முக்கிய மூன்று முனைகளில் நடந்தது. ஆனால், அதன் ஆதார முனை என்பது வதுரயின் பகுதியில் தான் நடந்தது.



குடாரப்பில் தரையிறங்கி வதுரயின் பகுதி பரந்த மணல்வெளியில், அங்கே எந்தவிதமான தடுப்புச்



சுவர்களோ, மரங்களோ இல்லை, அந்தப் பொட்டல் பரப்பிலே சண்டை நடந்தது. அதுவும் கடற் பரப்பு சிங்கள கடற்படையின் கட்டுப் பாட்டில் இருக்கின்றது. அந்தப் பக்கம் போனால் பலாலியில் ஆயிரக் கணக்கான இராணுவ வீரர்கள் இருக்கின்றார்கள். அப்படியே வந்தால் பளையில் ஆயிரக் கணக்கான இராணுவ வீரர் கள் அப்படியே சுற்றிவரு கின்றபோது ஆனையிறவில் பல்லாயிரக்கணக்கான இரா ணுவவீரர்கள்.

சுற்றிலும் முற்றுகையிடப் பட்ட நான்கு திசைகளிலும் ஏறக்குறைய நாற்பதினாயிரம் சிங்கள வீரர்களை எதிர்கொண்டு' வெறும் 400 வீரர்களை மட்டும் கொண்டு ஒரு பொட்டல் காட்டிலே தரையிறங்குகின்ற தளபதி பால்ராஜினு டைய படைகள். அந்த இடத்திலே குழி வெட்டி அந்த குழிக்குள் நின்று கொண்டு 40 நாட்களுக்கு மேலாய் இந்த நாற்பதினாயிரம் படைவீரர்களை மட்டுமல்ல, கடற்படையை, விமானப் படையை, பீரங்கிப்படையை, தரைப்படையை, எல்லாப் படைகளையும் எதிர்கொண்டு நிற்கின்றார்கள்.



இதற்கெல்லாம் மேலாக விநியோகம் என்பது இவர்களுக்கு அறவே கிடையாது. போனவர்கள் ஒன்றில் வெல்ல வேண்டும். வெல்ல முடியவில்லை என்றால் அந்த 400 பேரும் இறக்க வேண்டும். அவர்களில் ஒருவருக்காவது காயம்பட்டதென்றால் மருத்துவ உதவி வராது. அவர்களை முற்றுகையிடப்பட்டார்கள் என்றால் அவர்களை மீட்பதற்கு அங்கிருந்து மீட்கும் படையணிகள் வரமுடியாது. அவர்களுக்கு கொடுக்கப்பட்ட ஒரே பணி பளைப் பகுதியில் பளைக்கும் ஆனையிறவிற்கும் இடையில் ஏ - 9 நெடுஞ்சாலையை இடைமறித்து சிங்களப் படைகளுக்கான ஆனையிறவிற்கான விநியோகப் போக்குவரத்தை இடைமறிக்க வேண்டும் என்பதுதான். அப்படியானதொரு எந்த வீரனாலும் செய்-யமுடியாத பணியை, ஒரு வீரப்பணியை பால்ராஜ் செய்து கொண்டிருக்கிறார்.

அப்போது அனுரத்த ரத்வத்த பலாலி விமானத் தளத்திலே வந்து இறங்குகிறார். 'ஏன் நீங்கள் நாற்பதினாயிரம் படைவீரர்கள் இருந்தும் இந்த 400 பேரை அதுவும் ஒரு பொட்டல் வெளியிலே எதிர்கொண்டு அவர்களை அழிக்க முடியவில்லை' என்று கேட்டபொழுது ஹெட்டியாராச்சி செய்வோம். ஆனையிறவிலிருந்து நாமாக பின் வாங்குவோம். பின்வாங்கி பளைப் பகுதியில் நின்று கொண்டு இவர்களைச் சுற்றி வளைப்போம்" என்று சொன்னார்.



அது சரியான ஒரு இராணுவ முடிவு. ஆனால். இராணுவ அமைச்சரான ரத்வத்தையினு டைய ஈகோ. அரசியல் ரீதியாக அது தென்னிலங்கையில் பாரதுாரமான விளைவுகளை



ஏற்படுத்தும் என்பதாலும், ஆனையிறவிலிருந்து பின்வாங்குகின்றோம் என்று ஒரு செய்தி வந்தால் அது அரசிற்கு அவப்பெயர் தருமென்பதாலும அந்த முடிவை நிராகரித்தார்.

'நீங்கள் எல்லாம் ஒரு இராணுவத் தளபதிகளா? நீங்கள் எல்லாம் ஒரு வீரர்களா? நாற்பதினாயிரம் பேரை வைத்துக் கொண்டு விமானப்படை கடற்படை வலுவையும் வைத்துக்கொண்டு ஒரு 400 பேர் கொண்ட சிறு அணியை அதுவும் பொட்டல் காட்டில் அதுவும் பெட்டிச்சண்டை நடக்குமிடத்தில் எதிர்கொள்ள முடியவில்லையே' என்று கேட்டார். அப்பொழுது ஹெட்டியாராச்சி பின்வருமாறு சொன்னதாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. வெளிப்படையான பதிவு இல்லை. ஆனால் அவர்களுக்குள் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

ஹெட்டியாராச்சி அனுரத்த ரத்வத்தையைப் பார்த்து, 'சேர், தலைவர் பிரபாகரன் அவர்கள் வந்து நின்றாலும் கூட நாங்கள் அதைப் பிடித்து விடுவோம். ஆனால், பால்ராஜ் வந்து உட்கார்ந்து விட்டான்; அவனை எழுப்ப முடியாது' என்று சிங்களத்திலே சொல்லுகின்றார். இதை தேசியத் தலைவர் ரேடியோவில் கேட்டு, பதிவுசெய்து வைத்திருத்ததாக செய்தி ஒன்றும் உள்ளது.

தேசியத் தலைவர் அவர்கள் இதை பதிவு செய்து வைத்து பால்ராஜ் அவர்களுக்கு போட்டுக்காட்டி, 'உன்னுடைய எதிரியே உன்னைப் பற்றி இப்படிப் பாராட்டி விட்டான். நான் வந்திருந்தால் கூட என்னை எழுப்பி விடுவார்களாம். ஆனால், பால்ராஜ் இருந்து விட்டான் - அவனை எழுப்புவது கடினம் என்று சொல்கிற அளவிற்கு நீ பெருமை பெற்றுவிட்டாய்' என்று வாழ்த்தினாராம். அது இன்னோர் நாளில் வரலாற்றுக் கதையாகவே வரும்.



அப்படிப்பட்ட திறன் கொண்ட, நுட்பமான ஆற்றல் கொண்ட ஒரு தளபதி அவர். அந்தத் தளபதியினுடைய இழப்பு தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் இன்றைக்கு, அதுவும் கடும் நெருக்கடியான பல திசைகளிலிருந்தும் எதிர்கொள்கின்ற இந்த காலத்திலே மிகப்பெரிய இழப்பு. நான் வெரித்தாஸ் வானொலியில் கடமையாற்றிய பொழுது, சமாதானப் பேச்சுவார்த்தைகள் தொடங்கிய காலத்தில் பலரை நேர் கண்டு உரையாடினேன். அவர்களினுடைய கருத்துகளை பதிவு செய்கின்ற அந்த வாய்ப்பு எனக்கு கிடைத்தது. அந்த பயணத்தில் நேர் கண்ட மனிதர்களில் மகத்தான ஒரு மனிதராக தளபதி பால்ராஜையும் பதிவுசெய்ய விரும்புகிறேன்.

ஏனென்றால் அந்த வீரன் அற்புதமான மனிதனாக இருந்தான். களங்கள் கண்ட பெருமிதமோ வாகை சூடிய வல்லமை வெளிப்பாடுகளோ இல்லாத அடர்த்தியான ஒரு எளிமை சுமந்த அந்த ஆளுமையினு டைய தரிசனம் என் மனத்திரையில் இன்னும் ஆழமாகப் பதிந்திருக்கிறது.

நான் சந்தித்த பொழுது உடல் நலம் குறைந்தவராய் மருத்துவ சிகிச்சை பெற்றுக்கொண்டிருந்தார். உடல் நலம் அற்றிருந்தபோதும் கூட ஒரு மரக் கட்டிலில் படுத்துகொண்டிருந்தார் எளிமையாக. வெரித்தாஸ் வானொலியிலிருந்து நேர்முகம்காண கேள்வியோடு சென்றவன் நான். ஆனால் என்னுடைய நிகழ்ச்சிகளையெல்லாம் கேட்டுவிட்டு, இந்த பாதரிடம் நான் கற்றுத் தெரிந்துகொள்ளவேண்டும் என 42 கேள்விகளை எழுதி வைத்திருந்தார். அந்த பழைய நோட்டுக்தாளில் எழுதி வைத்து, ஒரு சிறு குழந்தையைப் போல, கற்றுக் கொள்ள வேண்டுமென்ற தாகத்தோடு, ஆர்வத்தோடு அவர் இருந்தது தனக்கு அறிவுரை வேண்டுமென்று அல்ல. சதா பொழுதும் தமிழீழம் என்று வரும், என்று வரும்

என்கின்ற அந்த வேட்கையோடு, கனவோடு யார் வந்தாலும் அவர்களிடமிருந்து தமிழீழ விடுதலைப் போருக்காக ஏதேனும் ஒன்றை கற்றுக்கொள்ள வேண்டும், புதிதாக அறிந்து கொள்ள வேண்டும் என்ற அந்த வேட்கையோடு இருந்ததைப் பார்த்த பொழுது, நான் என்ற ஆணவம் இல்லாத, நான் என்கின்ற அகந்தையில்லாத, வெற்றி பெற்றோம் என்ற அந்த மதர்ப்பும், பெருமிதமும் இல்லாத உண்மையான தியாகத்தின் எளிமையின் அடையாளமாய் இருக்கின்ற இவரைப் போன்ற ஒரு தளபதியை நாம் கண்டு வணங்கி, வாழ்த்தி, இவரைப் போல இருக்க வேண்டுமென்றும் முன்னுதாரணமாக எடுத்துக்கொள்ள வேண்டிய ஒரு ஆளுமை கொண்டவர் என்றும் அன்று நான் அவரைப் போற்றினேனோ, இன்றும் அதே உணர்வோடு, இந்த நேரத்தில் அவருடைய நினைவாக பதிவுசெய்ய நான் விரும்புகிறேன்.



பால்ராஜ் அவர்களைப் பற்றி சொல்லுகின்ற பொழுது இன்னொன்றையும் சொல்ல வேண்டும். தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றிலே கொரில்லா இராணுவமாக இருந்த விடுதலைப் புலிகள் மரபுரீதியான இராணுவமாக மாறியது முதலில் சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவினுடைய உருவாக்கத்தில் தான். அந்த படைப்பிரிவை உருவாக்கியதில் பால்ராஜ் அவர்களுக்கு முக்கிய பங்கு உண்டு. அந்த படைப்பிரிவை வழி காட்டியதிலும் பல வெற்றிகளை குவித்ததிலும் அவருக்கு பங்கு உண்டு. அவருடைய சாதனைகளின் பட்டியலை முழுதுமாக இங்கே எடுத்துவைக்கின்ற ஒரு தருணம் அல்ல இது. அதை பலரும் செய்திருப்பார்கள். ஆனால் அவரின் இழப்பு ஏன் பேரிழப்பு என்றால், அவர் களத்தில் நிற்கிறார் என்றால் 100 போராளிகள் ஒரு இலட்சம் போராளிகளுக்கு சமமானவர்களாக மாறுகின்றார்கள். அந்தளவிற்கு ஒரு இலட்சிய வேட்கையையும் உணர்வு எழுச்சியையும் கொடுக்கின்ற ஆற்றல் அவருக்கு இருந்தது.

ஏனென்றால் அவர் அறையில் இருந்து கொண்டு அணிகளை வழி நடத்துகின்ற தளபதி அல்ல. களத்தில் நின்று கொண்டு மரணத்தை ஒவ்வொரு கணமும் எதிர்கொண்டு அதை எப்பொழுது வேண்டுமானாலும் அரவணைத்துக் கொள்ளத் தயாராக நின்று அந்த போராளிகளோடு வாழ்ந்தவர்; வழிநடத்தியவர்.



வாழ்க்கையிலும் அந்த போராளிகளோடே இருந்தவர். தனக்கென்ற வசதிகள், தனக்கென்று தனித்துவமான மரியாதைகள் என எந்த இடங்களையும் தேடாமல் ஒரு சாதாரண போராளியாகவே வாழ்ந்தவர். அதனால் தான் அவருக்கு சிறப்பு எனவே தான் சொன்னேன்



அவர் களத்திலே நிற்கிறார் என்றால் 100 போராளிகள் ஒரு இலட்சம் போராளிகளாக மாறுகின்றார்கள்.

அந்தளவிற்கு ஆற்றல் மிகுந்த ஒரு ஆன்ம வல்லமை கொண்ட அந்த ஆன்ம வல்லமையினுடைய உணர்வுகளையும் ஏனைய எல்லாப் போராளிகளுக்கும் ஊட்டும் திறன் கொண்ட ஒரு மகத்தான ஒரு அற்புதமான ஒரு ஆளுமை பால்ராஜினுடைய ஆளுமை. பெரும் பின்னடைவாக இருந்தாலும் ஒரு நீண்ட விடுதலைப் பயணத்தில் இவையெல்லாம் நாம் எதிர்கொண்டே தீர வேண்டிய தவிர்க்க முடியாத வேதனைகள், வலிகள்.

ஆயினும் இந்த நேரத்தில் ஒன்றை புலம்பெயர் தமிழ் மக்களுக்கு நான் சொல்ல விரும்புகிறேன். இந்த கால கட்டத்தில் நெருக்கடியான கால கட்டம் தான். ஆனால் அவநம்பிக்கையின் காலகட்டமல்ல. இதைவிட நெருக்கடியான காலகட்டங்களையெல்லாம் தமிழீழ விடுதலைப் போராட்டம் கண்டிருக்கின்றது; கடந்திருக்கின்றது.

அழிவின் விழிம்பின் முனை வரைக்கும் சென்று நிற்கின்றதோ என்ற ஐயங்கள் ஏற்படுகின்ற அளவிற்கு தமிழீழ விடுதலைப் போராட்டம் சில தருணங்களில் நின்றிருக்கிறது. அவற்றையெல்லாம் கடந்தது என்றால், அவற்றையெல்லாம் வென்றது என்றால், இந்த கணத்தையும் இந்த தருணத்தையும் இந்த காலகட்டத்தையும் அது கடக்கும் அது வெல்லும். உண்மையில் ஈழத்திற்கான இறுதிப் போராட்டம் என்பது என்னைப் பொறுத்த வரையில் தமிழீழப் பகுதிகளில் நடக்காது உலகளவில் புலம்பெயர்வாழ் மக்கள் வாழுகின்ற களங்களில் தான் நடக்கும்.

இதை நீங்கள் என்னுடைய தீர்க்க தரிசனமென்றே எடுத்துக் கொள்ளுங்கள். அதை இந்த நாளிலே ஏன் சொல்கிறேன் என்றால் இந்த மகத்தான மனிதருக்கு, பால்ராஜ் என்கின்ற தமிழீழத் தாயின் புதல்வனுக்கு, நீங்களும் நானும் செலுத்துகின்ற மரியாதை.



தமிழீழ விடுதலைப் போராட்டத்தை புலம்பெயர் உலக நாடுகளில் எங்கெல்லாம் இருக்கின்றோமோ அங்கெல்லாம் அந்த போராட்டத்தை இன்னும் உன்மத்தம் கொண்டதாக்கி உண்மையில் ஈழத்திற்கான இறுதிப் போரை இந்த நாடுகளில் ஈழத்திற்கு அப்பால் இருக்கின்ற இந்த மண்களில், பூமிகளில் தொடங்குவது தான்.

எப்படி என்று நீங்கள் கேட்கலாம். அதற்கான ஒரு அடையாளம், நம்மையெல்லாம் சிலிர்க்க வைக்கின்ற ஓர் அடையாளம் அண்மையில் நடந்தது. ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைக் குழு அரங்கிலே இலங்கை தோற்கடிக்கப்பட்டு அவமானகரமாக வெளியேற்றப்பட்டது.

உலக நாடுகளினுடைய மனித உரிமைகள் சார் வலுவான குரல்களும், வலுவான அமைப்புகளும் இதற்கு முன்னணியில் நின்று குரல் கொடுத்தன என்றாலும் கூட புலம்பெயர்ந்த தமிழீழ மக்களின் ஒரு சிறு தொகுதியினர் விழிப்புணர்வு பெற்ற, உள்ள ஒளி பெற்ற, உள்ள உறுதிகொண்ட ஒரு சிறு பிரிவினர் அறிவு ஆற்றல் கொண்ட அந்த பிரிவினர் நடத்திய இடைவிடாத முயற்சிகள் தான்.

சிறு சிறு முயற்சிகள் தான் மனித உரிமைகள் அரங்கிலே இந்த சிறிலங்கா அரசு அவமானப்படுத்தப்பட காரணமாக இருந்தது.

அந்தப் போர் தொடங்கி விட்டது. ஈழத்திற்கான இறுதிப் போர் உலக அரங்கிலே தமிழர்களால் சிறு தொகுதியினரால் இன்று தொடங்கப்பட்டு விட்டது. இந்த போர் வலுவடைய வேண்டும். இந்த போர் உன்மத்தம் பெற வேண்டும்.

இந்த போரில் யாரும் நம்மைத் தோற்கடிக்க முடியாது. மனித உரிமை அரங்கிலிருந்து இவர்களை வெளியேற்றுவது மட்டுமல்ல ஒரு மனித இன அழிவை நடத்தியதிற்காக இவர்களிடமிருந்து அதற்கான விலையை நாம் பெற்றே ஆக வேண்டும். அதற்கான நீதியை நாம் பெற்றே ஆக வேண்டும்.

அது புலம்பெயர் மக்களால் முடியும், இயலும், அங்கேயே பிறந்து வளர்ந்து அந்தந்த நாடுகளினு டைய கலாசார வழக்கங்களை தெரிந்த, அந்தந்த நாட்டு மக்கள் பேசுகின்ற மொழிகளிலே பேசத் தகுதிகொண்ட அந்தந்த நாடுக ளினுடைய மக்கள் எப்படி அரசியலையும் சமூக வாழ் வையும் நடத்துகின்றார்களோ அப்படியே நடத்தி அவர்கள் எளிதாக ஏற்றுக்கொள்கின்ற விதத்தில் வாதங்களை முன்வைக் கின்ற திறன் கொண்ட ஒரு புதிய தலைமுறை இன்று எழுந்து வரு கின்றது.



அவர்களுக்கெல்லாம் இந்த நீதி உணர்வை, இலட்சிய உணர்வை அவர்கள் ஈழ விடுதலை என்று தாகம் கொண்டிருக்கின்றார்களோ இல்லையோ குறைந்த பட்சம் எமது கண்பட எமது காலத்தில் ஒரு மனித அழிவு ஒரு மனித இனப்படுகொலை நடந்திருக்கின்றது. இதற்கான பதிலை நாகரீகமான நாம் கற்றறிந்தவர்கள். அதைச் சொல்லுகின்ற ஜனநாயக உரிமைகள் கொண்டநாட்டிலே வாழ்க்கின்றவர்கள் பெற்றுத்தரவில்லை என்றால் அதைப் போல ஒரு அவமானம் நமக்கு இருக்கமுடியாது.

ஈழத்திற்கான இறுதிப்போர் உண்மையில் உலக அரங்கில் தான் நடக்கும். அந்தப் போரை தொடர்ந்து போரிடுகின்ற பலரது பெயரைக்கூட குறிப்பிட முடியும். ஒருநாளில் நான் அதை பதிவு செய்வேன். அவர்களை நாம் போற்றியே ஆக வேண்டும் இந்த போராடுகின்ற பிள்ளைகள் மனிதர்கள் தான் இப்படிப்பட்ட பால்ராஜ் போன்ற களத்தில் நின்று தியாகம் செய்தவர்களுக்கு மிகப்பெரிய வணக்கம் செய்கின்றவர்களாக இருக்கின்றார்கள். அதேபோல பல ஆற்றல்கள் இருக்கின்றன. இன்னொன்றையும் சொல்ல விரும்புகிறேன். இந்த தளபதி இன்னும் 20 ஆண்டுகள் வாழ்ந்திருப்பார் என்றால் எவ்வளவு பங்களிப்பை அவர் செய்திருக்க முடியும். 42 வயதில் நாம் அவரை இழந்திருக்கின்றோம் என்றால் அவர் களத்திலே நின்றோ, அல்லது எதிரியினு டைய எறிகணை வீச்சுக்கோ, விமானக்குண்டு வீச்சுக்கோ, சதிக்கோ பலியாகவில்லை.





இன்று இதய நோயென்பது தீர்க்கப்பட முடிகிற, சிகிச்சை அளிக்கப்படக் கூடிய, நலம் பெறக்கூடிய ஒரு நோய் அதற்கான திறன் ஆற்றல் உலகளவில் எத்தனையோ தமிழர்களுக்கு இருக்கிறது. மிகவும் விற்பன்னத் தன்மை கொண்ட எத்தனையோ மருத்துவர்கள் இருக்கின்றார்கள். ஆனால், அந்த ஆற்றல்களை அங்கே நாம் அவர்களுக்குப் பகிர்ந்து கொள்ள முடியவில்லை.

உண்மையில் இங்கே இராணுவ ஆயுதம் வாங்குவதற்கு நாம் உதவி செய்வது சட்ட விரோதமாக இருக்கலாம். ஆனால் மனிதாபிமானப் பணிகளான மருத்துவ வசதிகள், மருத்துவ உட்கட்டமைப்பு வசதிகளைச் செய்வது ஒன்றும் சட்டவிரோதமான செயல் அல்ல. அது மானிடப் பணி தான். அந்தப் பணியையேனும் இன்னும் நாம் விரிவுபடுத்தி செய்திருந்தால், செய்திருக்க முடியும் யாரும் தலையிட்டிருக்க முடியாது. நம்மிடம் எல்லா வளமும் ஆற்றலும் இருக்கின்றது. அப்படி செய்திருந்தால் இப்படி அற்புதமான தளபதியை இன்று நாம் இழந்திருக்க மாட்டோம். அந்த கடமைகளேனும் மனிதாபிமான கடமைகள் சட்டநெறிமுறைக்கு உட்பட்ட கடமைகள், நாம் செய்துமுடிக்கக்கூடிய கடமைகள் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றையெல்லாம் தவறாது செய்வதுதான் உண்மையிலே இனி வரும் நாட்களில் நல்ல பலரை காப்பாற்றுவதற்கான நடைவடிக்கைகள் மேற்கொள்வதன் மூலம் தான் இந்த தளபதிக்கு இன்று நாம் உண்மையான வணக்கத்தை செய்ய முடியும்.



அன்பிற்குரிய தமிழ் மக்களே! எல்லா இரவுகளும் முடியும். எல்லாக் கொடுமைகளும் முடியும். நிச்சயமாக இருள் விலகித்தான் தீரும். இருளின் ஆட்சி நீண்டு நிலைக்க முடியாது. இந்தக் கால கட்டம் சவால்களின் கால கட்டமாக இருந்தாலும் கூட ஒரு வகையில் நம்பிக்கையினுடைய காலகட்டமாக இருக்கின்றது.

ஏனென்றால், களத்திலே போராளிகளுடைய எண்ணிக்கை அதிகரித்து வரவில்லை என்றாலும் உலக அரங்கிலே தமிழ் மக்களின் நீதிக்கான போராளிகள் அனுதினமும் ஒவ்வொரு நாளும் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றார்கள். அந்த எண்ணிக்கை மேலும் பெருக வேண்டும் வளர வேண்டும். இன்னும் கூர்மையான குரல் கொண்டவர்களாக மாற வேண்டும். இந்த சிறிலங்கா அரசை மனித குல அழிவென்கிற குற்றத்திற்காக உலக அரங்கிலே நிறுத்தி நமக்கான நீதியினையும் தேடிக்கொள்கின்ற அந்த நாளினில் தான் உண்மையில் பால்ராஜ் போன்றவர்களின் ஆன்மாவும் மகிமை பெறும். அந்த நாள் வரை அவருடைய நினைவைச் சுமந்து இந்த விடுதலையின் நியாயத்தை தமிழீழ மக்களின் நீதிக்கான போராட்டத்தை தொடர்ந்து நாமெல்லாம் நடத்துவோம்.



கடவுளே!
காலம் உருண்டோடி
நாம் ஈழம் வெல்லப் போகும்
இந்நாளில்
எதற்கையா இந்தச் சதி - எங்கள்
பால்ராஜ் அண்ணனை
அழைத்துக்கொள்ள இறைவா
நீ போட்ட நாடகத்தின்
பெயர் விதி.



நயவஞ்சகக் கூட்டத்தையெல்லாம்
நல்லபடி வாழ வைத்துவிட்டு
தமிழரின் நலனே தனது நலம் என
தமிழர்க்காய் வாழ்ந்தவனை
தரணிவிட்டு அழைத்துக்கொண்டாய்
இதுவா உன் நீதி - இல்லை
இது எம்மினத்திற்கு இறைவா நீ
இழைத்த அநீதி.

சாவுக்கு அஞ்சாதவனை
சதி செய்து கொன்று விட்டாய்
பகை குண்டும் அஞ்சும் - அஞ்சாநெஞ்சன்
நம் தளபதியைத் தீண்ட
குண்டு கொண்டு
பறிக்க முடியாத உயிரை
கோழையாய் கொடிய நோய்
கொண்டு பறித்துவிட்டாய்
இது தகுமா இறைவா இது தகுமா.

இரக்கமற்ற இறைவனே
இது கொடுமை ஈழ மக்களின் இதயம்
எங்கள் பால்ராஜ் அண்ணா - இங்கு
ஒரு இனமே கேட்கிறோம்
எங்கள் தளபதி உயிரை - இறைவா
இரக்கம் காட்டித் திருப்பிக்கொடு.

ஈழதேசமே இன்று சோகத்தில்
எல்லோர் விழிகளும் இங்கு ஈரத்தில்
இன்னுமா உன் மனதில் ஈரமில்லை
இறைவா இனியும் ஏன் தாமதம் - தமிழர்
உணர்வோடு கலந்துவிட்ட எங்கள்
உத்தமனுக்கு உயிர் கொடுத்து
உயிர்வலிக்க நாம் கேட்ட செய்தியை
கனவாக மாற்றிவிடு
எங்கள் தளபதி உயிர் உடல்விட்டு
பிரிந்ததை கடவுளே கனவாக்கு!



# கடவுளே கனவாக்கு!

- பெ. சதாசிவம், தமிழீழ காவல்துறை -







# படைத்துறையின் பாடப்புத்தகம் பால்ராஜ்

## - இழப்பினை முன்வைத்து சில பதிவுகள் -

- ப.தெய்வீகன் -

படைத்துறையின் பாடப்புத்தகமாக விளங்கும் பிரிகேடியர் பால்ராஜின் மரணத்துக்கு தாம் காரணமாகவில்லையே என்று கவலையும் அதேவேளை புலிகளின் கொழுகொம்பொன்று முறிந்துவிட்டது என்று மகிழ்ச்சியும் தெரிவித்து வருகிறது சிங்கள தேசம்.

ஆனால், பால்ராஜின் இழப்பை தமக்கு ஏற்பட்ட பேரிழப்பாக பார்க்கும் தமிழ் மக்களில், ஒரு பகுதியினர் அது எமது போராட்டத்துக்கு ஏற்பட்ட பாரிய பின்னடைவாகவும் நோக்கி நொந்து கொள்கிறார்கள் என்று அண்மையில் பால்ராஜ் நினைவு நிகழ்வில் சந்தித்த நண்பர் ஒருவரின் கேள்வி மூலமாக புரிந்து கொள்ளக்கூடியதாக இருந்தது.

எனது நண்பர் கொண்டுள்ள இந்த கவலையின் நியாயப்பாட்டை விரிவாக நோக்கும் முன் பால்ராஜை பற்றிய ஒரு பார்வை.



ஈழமண் மீது போர் தொடுக்கும் எதிரி எவனுக்கும் வயிற்றில் புளிகரைக்கும் சொல் 'பால்ராஜ்'. பாரிய நடவடிக்கைகளை முன்னெடுத்துக்கொண்டு பல முனைகளில் முன்னேற முயலும் இராணுவத்திற்கு, பால்ராஜின் படைகள் எங்கு நிற்கின்றன என்று அறிந்து கொள்வதுதான் முதல் வேலையாகவும் பின்னர், பால்ராஜின் படைகளை தவிர்த்து வேறு முனைகளை உடைத்துக்கொண்டே சண்டையிடுவதும் வழக்கமாக இருந்து வந்துள்ளது என்று பால்ராஜின் பாசறையில் பயின்ற போராளி ஒருவன் பெருமையுடன் கூறினான்.

பால்ராஜ் என்பவன் சிங்களப் படைத்தளபதிகள் போல கொழும்பில் இருந்து கொண்டே கப்டன், மேஜர், லெப்ரினன்ட் கேணல் என்ற பதவிநிலைகளை கடந்து வந்தவன் அல்லன். ஒவ்வொரு களத்திலும் எதிரியை புரட்டி எடுத்து, அவனது திட்டங்களை துவம்சம் செய்து, எத்தனையோ விழுப்புண்களை அடைந்துதான் இத்தனை பெரிய தளபதியாக வளர்ச்சி பெற்றான். போர்க்களத்தையே தனது வதிவிடமாகக் கொண்டவன் அவன்.

'ஜெயசிக்குறு' படை நடவடிக்கைக்கு முன்னர் ஆனையிறவிலிருந்து கிளிநொச்சி நோக்கி இராணுவம் பெரும் எடுப்பிலான நகர்வு முயற்சியொன்றை முன்னெடுத்திருந்தது. இதனை இருமுனைகளால் எதிர்கொண்ட புலிகள், கண்டி வீதிக்கு கிழக்காக ஒரு அணியையும் மேற்காக மற்றைய அணியையும் நிறுத்தி எதிர்ச்சமரில் ஈடுபட்டனர். இந்த இரு அணிகளில் பால்ராஜ் தலைமையிலான அணி எங்கு நிற்கின்றது என்பதை வானலைகளை ஒற்றுக்கேட்டு அறிந்துகொண்ட இராணுவம், அந்தப்பிரதேசத்தை விட்டுவிட்டு மற்றைய முனையாலேயே தாக்குதலை மேற்கொண்டது.



இந்த சம்பவத்தை நினைவு கூர்ந்த அவரது தலைமையின் கீழ் சண்டையிட்ட போராளி



ஒருவர், பால்ராஜ் அண்ணா களத்தில் நின்றால் அங்கு தமது பருப்பு வேகாது என்ற பயம் இராணுவத்தினருக்கு மட்டுமல்ல அவர்களை வழிநடத்தி கூட்டிவரும் தளபதிகளுக்கும் தெரியும் என்றார்.

எந்த ஒரு கட்டத்திலும் பதற்றப்படாமல் திட்டங்களை செயற்படுத்தும் திறமை என்பது பால்ராஜ் அண்ணா தலைவரிடமிருந்து படித்த மிகப்பெரிய பாடம். எதிரி எம் படைகளை முற்றாக தனது முற்றுகைக்குள் கொண்டுவந்துவிட்டாலும் கூட பதற்றப்படாமல், அணிகளை ஒருங்கிணைத்து, தனது திட்டத்தை செவ்வனே முன்னெடுத்து, சாதுரியமாக எதிரியின் கண்ணில் மண்தூவும் வித்தை பால்ராஜ் அண்ணா சண்டைகளிலும் காண்பிக்கும் சாகச விளையாட்டு.

தாம் போட்ட திட்டங்களை செயற்படுத்த முடியாமல் போனவுடன், மாற்றுத்திட்டத்தை உடனடியாக வகுக்க முடியாமல் எமது வலையில் வீழ்ந்த எத்தனையோ சிங்கள தளபதிகளிலிருந்து பால்ராஜ் அண்ணா விலகி நிற்பது இந்த இடத்தில்தான். களநிலைமைகளுக்கு ஏற்ப திட்டங்களை முன்னெடுப்பதும் தலைவரின் நெறிப்படுத்தலை நேர்த்தியாக செயற்படுத்துவதும் அவர்பால் வியக்க வைக்கும் ஆற்றல்கள். அவரது போரியல் அனுபவமும் ஒவ்வொரு போராளியினதும் திறமையை குறிப்பாக அறிந்து வைத்திருக்கும் பக்குவப்பட்ட படைத்துறை அறிவும்தான் எமது வெற்றிகள் பலவற்றுக்கும் பலமான அடித்தளமாக அமைந்தன.

களமுனையில் கடமையிலிருக்கும் போராளிகளை தினமும் சந்தித்து அவர்களுடன் சேர்ந்து நிலவரங்களை மதிப்பீடு செய்வதென்பது பால்ராஜ் அண்ணனின் அன்றாட கடமைகளில் ஒன்று.

ஒவ்வொரு போராளியினதும் திறமைகளை அறிந்து அவற்றை தலைவரிடம் எடுத்துக்கூறி அவர்களுக்குரிய பணிகளை ஒதுக்குவதில் பால்ராஜ் அண்ணனின் பங்கு மகத்தானது - என்று பால்ராஜின் பெருமை பற்றி அடுக்கிச்சென்றார் இன்னொரு போராளி.

இத்தகைய ஒரு தானைத்தளபதியை இன்று தமிழினம் இழந்திருப்பது உண்மை. ஆனால், தமிழர்களின் போராட்டத்துக்கு இது ஒரு இழப்பா என்ற எனது நண்பரின் கேள்விக்கு வருவோம்.

அவரது கேள்விக்கு விடையை, அவுஸ்திரேலியாவில் அண்மையில் நடைபெற்ற பிரிகேடியர் பால்ராஜ் நினைவு வணக்க நிகழ்வில் பேசிய அவுஸ்திரேலிய ஈழத்தமிழ்ச் சங்கத்தின் முன்னாள் தலைவர் நித்தியகீர்த்தியின் பேச்சுடன் ஒப்பிட்டுப்பார்ப்போம்.



தனிமனித இழப்புக்கள் எமது தமிழீழப் பயணத்துக்கு ஒருபோதும் தடையாக அமையாது. தலைவர் பிரபாகரனின் தலைமையில் எமது போராட்டம் தொடரும். பிரிகேடியர் பால்ராஜின் இந்த எண்ணத்துக்கு செல்வடிவம் கொடுப்பதே அவருக்கு நாம் செய்யும் உண்மையான அஞ்சலி - என்று நித்தியகீர்த்தி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

இந்த உண்மையை, இழப்புக்களால் துவண்டு போயுள்ள எம்மக்கள் புரிந்துகொள்ள வேண்டும். தமிழர்களின் போராட்டம் எத்தனையோ பல சாதனை வீரர்களை இழந்திருக்கிறது. எதிரியின் சதிவலையில் சிக்கி பல தளபதிகள் வீரச்சாவை தழுவியிருக்கிறார்கள். அப்போதெல்லாம் தமிழினம் துவண்டு போயிருந்தால் இன்று சர்வதேசமே அங்கீகரிக்குமளவுக்கு எமது போராட்டம் இவ்வளவு தூரம் பரிணமித்திருக்காது.



இழப்புகளால் மனம் உடைந்துபோயுள்ள இந்த மக்களின் மனநிலை, அன்று தனது உற்ற நண்பன் சீலன் வீரச்சாவடைந்த போது தலைவர் பிரபாகரனுக்கு ஏற்பட்டிருந்தால் எமது விடுதலைப் போராட்டம் இவ்வளவு தடைகளை கடந்திருக்குமா என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

அந்த இழப்புக்களின் பின்னர் விடுதலைப் புலிகள் படைத்த வீர வரலாறுகளை புரட்டிப்பார்க்க வேண்டும்.

விடுதலைப் புலிகளின் விமானப்படைத் தளபதி கேணல் சங்கர் அன்று எதிரியால் ஊடுருவித்தாக்கி படுகொலை செய்யப்பட்டதால் புலிகளின் வான்படை படுத்து விடவில்லை. அனுராதபுரத்திலும் சிங்களத்தின் தலைநகரிலும் வான் வழியால் வந்து குண்டுவீசுமளவுக்கு இன்று புதுவீச்சையடைந்துள்ளது.

யாழ். மக்களின் செல்லப்பிள்ளையான மன்னார், யாழ். மாவட்டங்களின் முன்னாள் தளபதி ராதாவின் இழப்பு உயிரைப்பிசையும் உணர்ச்சி மிக்கதுதான். ஆனால், அவரது பெயரிலான விமான எதிர்ப்புப் படையணிதான் இன்று சிங்களப் படைகளின் உயிர்குடிக்கும் வல்லூறுகளை சுட்டுவீழ்த்தி கூறுபோடுகின்றன.



வன்னிக் காட்டுப்பகுதியால் தலைவரின் செய்தியுடன் வந்துகொண்டிருந்த மூத்த உறுப்பினர் ஜொனியை சதிசெய்து கொன்றார்கள். தலைவருடன் பேசி ஒரு தீர்வைப்பெறலாம் என இந்தியாவிலிருந்து கிட்டு கொடுத்த உறுதிமொழியை கேட்டுவிட்டு, இங்கு வன்னிக்காட்டுக் குள் சதிவலையை பின்னி சாதனை படைத்ததாக எண்ணினார்கள். எதிரி இன்றுவரை அதன்





பலனை அனுபவித்துக்கொண்டிருக்கிறான். ஜொனி யின் பெயரில் வடிவமைக்கப்பட்ட மிதிவெடியால் அன்று மணலாறு காட்டுப்பகுதிக்குள் இந்திய இராணுவம் காலடி எடுத்து வைக்கவில்லை. இன்று அதன் பிந்தைய வடிவங்கள் முகமாலையில் இராணுவத்தின் கால்களை எண்ண வைத்திருக்கின்றன.

இம்ரான் - பாண்டியன் படையணி, மாலதி படையணி, சார்ள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி, குட்டிசிறி மோட்டார் பீரங்கிப் படையணி, விக்டர் கவச எதிர்ப்பு அணி, கிட்டு பீரங்கிப் படையணி என்று தரையிலும் கடலிலும் எண்ணிக்கொண்டே போகலாம்.

சாவை தழுவிக்கொண்ட சாதனையாளர்களின் கனவுகளைச் சுமந்து சக போராளிகள் தமது வீரத்தால் நனவாக்கிக்கொள்வதுதான் தமிழி னத்தின் வரலாறு. அவ்வாறான ஒரு இழப்புத்தான் இன்று பிரிகேடியர் பால்ராஜினுடையதும் என்பதை தமிழினம் புரிந்துகொள்ள வேண்டும்.

எண்பதுகளில் எதிரியின் கண்களில் விரல் விட்டு ஆட்டிய சாதனைத் தளபதி கேணல் கிட்டு. அப்போது பால்ராஜ் அவர்கள் புலிகள் அமைப்பில் இளநிலை போராளியாக இருந்தார். ஆனால் 90 இல் மாங்குளம் முகாம் தாக்கியழிப்பு, 96-இல் முல்லைத்தீவு முகாம் தாக்கியழிப்பு ஆகியவற்றின் பின்னர்தான் பால்ராஜ் என்றால் யார் என்றும் 2000 ஆம் ஆண்டு மேற்கொண்ட குடாரப்பு தரையிறக்கத்தின் பின்னர்தான் பால்ராஜ் என்னவெல்லாம் செய்வார் என்று எமக்கு மட்டுமல்ல எதிரிக்கும் தெரியவந்தது.



அதுபோலவே, தலைவனின் பாசறையில் இன்று எத்தனையோ பால்ராஜ்கள் எதிரியைப் புரட்டி எடுப்பதற்கு காத்திருக்கின்றனர். அவர்களின் வீரம் செறிவடையப்போகும் களம் எதுவென்று எதிரியே தீர்மானித்துக்கொள்ளட்டும்.

தமிழினம் ஒன்றைத் தெளிவாக புரிந்துகொள்ள வேண்டும்.

இருபதினாயிரம் மாவீரர்களின் தியாகத் தீயின் முன் சத்திய வேள்வியாக கொழுந்து விட்டெரியும் எமது போராட்டம், தனிமனித இழப்புக்களால் நின்றுவிடப்போவதில்லை. தலைவர் பிரபாகரனின் பெருவெற்றியே அதுதான்.

எத்தனையோ படையணிகள், எத்தனையோ தளபதிகள் என தமிழீழ இராணுவம் இன்று இந்தப் போராட்டத்தை எத்தனை சந்ததிக்கும் தாங்கிச் செல்லக்கூடிய வகையில் தலைவரால் கட்டமைக்கப்பட்டு விட்டது.

இந்த சுதந்திர தாகம் கொண்ட தேசத்தின் பயணத்தில் எந்த தடை வரினும் அதனை எதிர்கொள்ளக்கூடிய - வளம்மிக்க - எழுச்சி உணர்வு மிக்க - சமுதாயமாக எமது மக்களும் சிலிர்த்தெழ வேண்டும். அந்த எழுச்சியும் அதன் தொடர்ச்சியுமே எமது விடுதலையின் ஆன்ம பலமும் ஆகும்.

# இலட்சிய வேங்கைகள் இறப்பதுமில்லை விடுதலைப் புலிகள் வீழ்வதுமில்லை

- வேல்ஸிலிருந்து அருஸ் -

2000 ஆம் ஆண்டு மார்ச் மாதம் சிறிலங்காவின் அரச தலைவர் முதற்கொண்டு அடிமட்ட சிப்பாய் வரை அதிர்ச்சியில் உறைந்துபோன மாதம். மார்ச் 26 ஆம் நாள் அதிகாலை இரண்டு பற்றாலியன் சிறப்புப்படை அணிகளைக் கொண்ட 1,200 விடுதலைப் புலிகள் வடமராட்சி கிழக்கின் குடாரப்பு, மாமுனைப் பகுதியில் தரையிறங்கியிருந்தனர்.



சிறிலங்கா இராணுவத்தின் 54 ஆவது படையணி மற்றும் 53 ஆவது படையணியின் இரண்டு பிரிகேட்டுக்கள் உட்பட 15,000 இராணுவத்தினர் ஆனையிறவில் இருக்க, 53 ஆவது படையணியின் இரண்டு பிரிகேட்டுக்கள், 51, 52 ஆவது படையணிகள் மற்றும் 55 ஆவது படையணியின் சில பற்றாலியன்கள் என ஏறத்தாழ 25,000 துருப்புக்கள்,



இவற்றுக்குப் பின்னால் இருக்க 1,200 விடுதலைப் புலிகள் நடுவில் தரையிறங்கிய துணிச்சல் தென் ஆசியாவை ஒருகணம் உறைய வைத்திருந்தது.

அதாவது, ஏறத்தாழ 40,000 படையினரின் அழுத்தங்களை சமாளிக்கும் திறன்கொண்ட சிறப்புப் படையணியே இந்த ஆபத்தான முயற்சியில் களமிறங்கியிருக்கும் என்பதை யாரும் மறுத்துவிட முடியாது.

ஆம், விடுதலைப் புலிகளின் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி உட்பட பல சிறப்புப் படையணிகளில் இருந்து தெரிந்தெடுக்கப்பட்ட சிறப்பு கொமாண்டோக்கள், தளபதி பிரிகேடியர் பால்ராஜ் தலைமையில் குடாரப்பில் தரையிறங்கியிருந்ததுடன், 3 கொம்பனிகளைச் சேர்ந்த 450 சிறப்புப் படையணிகள் சிறு நீரேரியைக் கடந்து ஏ-9 வீதியை பளைக்கும் - முகமாலைக்கும் இடையில் ஊடறுத்திருந்தனர்.

முதலில் இது ஒரு வழமையான ஊடறுப்புத் தாக்குதல் என எண்ணிய அரசு பின்னர் நிலமையின் விபரீதத்தை புரிந்து கொண்டது. இராணுவ இயந்திரம் வேகமாக சுழன்றது.

28 ஆம் நாள் காலை சந்திரிகா தலைமையில் பாதுகாப்புச் சபை அவசரமாக கூடியது. ஆனையிறவுக்கு ஆபத்து என்ற கூச்சல்கள் அங்கு பலமாக எழுந்தன. கடுமையான விவாதங்களுக்குப் பின்னர் கூட்டத்தின் முடிவில் ஒன்றை மட்டும் சந்திரிகா ஆணித்தரமாக கூறினார்.

அதாவது, நீங்கள் விரும்பிய ஆயுதங்களைக் கேளுங்கள், விரும்பிய படைத்தளபதிகளை நகர்த்துங்கள். ஆனால், கேணல் பால்ராஜின் கொமாண்டோக்களிடம் இருந்து இழந்த பகுதியை மீட்டு விடுங்கள் என்பதே அவரது கோரிக்கை (இதனை மன்றாட்டம் என்று கூட கூறலாம்).

அவர் மேலும் ஒன்றையும் கூற மறக்கவில்லை. அதாவது, பிரிகேடியர் பால்ராஜை அங்கிருந்து வெளியேற்றும் வரை முப்படைத் தளபதிகளும் பலாலியில் தங்கியிருக்க வேண்டும் என்ற உத்தரவையும் பிறப்பித்தார்.

இராணுவத்தளபதி லெப். ஜெனரல் சிறீலால் வீரசூரிய, கடற்படைத் தளபதி வைஸ் அட்மிரல் சிசில் திசேரா, வான்படைத் தளபதி ஏயர் மார்சல் ஜெயலத் வீரக்கொடி ஆகியோர் இராணுவத்தின் பிரதம அதிகாரி மேஜர் ஜெனரல் லயனல் பலேகல்லவுடன் பலாலிக்குப் பறந்தனர்.

தம்மால் சுமக்க முடிந்த ஆயுதங்கள், சிறிதளவு உலர் உணவுப் பொருட்கள் என்பவற்றுடன் விடுதலைப் புலிகள், அவர்களை வழிநடத்தும் தளபதி, அருகில் திட்டம் வகுத்துக் கொடுத்த தலைவர், அவர்களுக்கு துணை வழங்கும் பொருட்டு மற்றைய களமுனைகளின் தாக்குதல்களை ஒருங்கிணைத்துக் கொண்டிருந்தார்.



இராணுவம் தனது சிறப்புப் படையணிகளையும், அதீத சுடுவலுவையும் கொண்டு விடுதலைப் புலிகளால் ஊடறுக்கப்பட்ட 4 கி.மீ அகலமான ஏ-9 வீதியை கைப்பற்ற தாக்குதலை ஆரம்பித்தது.

சிறீலால் வீரசூரியவுடன் சந்திரிகா தொடர்ச்சியாக தொடர்பில் இருந்தார். 53 ஆவது படையணியின் வான் நகர்வு பிரிகேட் (53-2), சிறப்பு தாக்குதல் பிரிகேட் (53-4)



என்பவற்றுடன் சிறிலங்காவின் பல பகுதிகளில் இருந்தும் தருவிக்கப்பட்ட சிறப்பு கொமாண்டோக்களும் இழந்த பகுதியை கைப்பற்ற தாக்குதலைத் தொடுத்தன.

34 நாட்கள் கடுமையான மோதல், நாற்புறமும் இராணுவத்தினர்.

எனினும் பிரிகேடியர் பால்ராஜின் கட்டளைகள் பிசகவில்லை. எம்-24 தாக்குதல் உலங்குவானூர்திகளும், டாங்கிகளும் தாக்குதலில் இணைந்து கொண்டபோதும், விடுதலைப் புலிகளை இராணுவத்தின் சிறப்பு அணிகளால் பின்தள்ள முடியவில்லை.

முதற் சமரில் ரி-55 ரக டாங்கி, ரி-63 ரக துருப்புக்காவி வாகனங்கள் இரண்டு, யுனிகோன் கவச வாகனங்கள் இரண்டு என்பன அழிந்து போக இராணுவம் பின்வாங்கியது. இராணுவம் பல வழிகளில் முயற்சித்தது.

53-ஆவது படையணியின் கட்டளைத் தளபதி பிரிகேடியர் காமினி கெட்டியாராட்சி, வான்நகர்வு பிரிகேட் கட்டளைத் தளபதி கேணல் றொசான் சில்வா ஆகியோர் மாற்றப்பட்டனர்.

மேஜர் ஜெனரல் சிசிர வீரசூரிய 53-ஆவது படையணிக்கு நியமிக்கப்பட்டார். சமர் தொடர்ந்தது. இராணுவத்தின் பிரதி பிரதம அதிகாரி மேஜர் ஜெனரல் ஜனக பெரேரா களத்தில் இறக்கப்பட்டார். ஆனால் பலன் எதுவும் இல்லை.

சிறிலங்கா வந்திருந்த பிரித்தானியாவின் பாதுகாப்பு பிரிவுத் துணைக் கொள்கை வகுப்பு அதிகாரி மேஜர் ஜெனரல் ஜோன் றீத்திற்கும் நிலமையின் விபரீதத்தை விளக்கினார் லயனல் பலேகல்ல.



பாகிஸ்தான் வருமாறு அழைத்த ஜெனரல் பெர்சாவ் முசராஃப்பின் கோரிக்கையையும் புறக்கணித்தார் சிறீலால் வீரசூரிய.

செறிவான சூட்டு வலுவுடன் தாக்குதல் உக்கிரமடைந்தது. 53 ஆவது படையணியின் கட்டளைத் தளபதி மேஜர் ஜெனரல் சிசிர வீரசூரியவும் மாற்றப்பட்டார். பிரிகேடியர் சிவாலி வனிகசேகரா நியமிக்கப்பட்டார். ஆனாலும் ஆனையிறவின் சரித்திரம் மாறிப்போனது.

ஆனையிறவின் இந்த சரித்திரத்தை மாற்றியமைத்தது, குடாரப்பு தரையிறக்கமே.

அதாவது ஆனையிறவுக்கான விநியோக வழிகளின் மூடலும், முற்றுகைச்சமருமே அந்தப் பெரும் தளத்தை வீழ்த்தியதுடன், 1991 ஆம் ஆண்டு ஆனையிறவுத் தளத்தை தக்கவைக்க இராணுவம் மேற்கொண்ட கட்டைக்காட்டு தரையிறக்கத்தை குடாரப்பு தரையிறக்கம் சமப்படுத்தியது.

தற்காப்புத் தாக்குதலுக்கு ஏற்றதே ஆனையிறவு களமுனை என்ற கருத்தை தாக்குதலுக்கு ஏற்றதாக மாற்றிய தேசியத் தலைவரின் திட்டத்திற்கு களமுனையில் செயல்வடிவம் கொடுத்தவர் பிரிகேடியர் பால்ராஜ்.

'சிறந்த ஒரு போர் வீரன் மேலதிக உதவிகளை எதிர்பார்ப்பதில்லை. தன்னிடம் உள்ள வளங்களே அவனுக்குப் போதுமானது' என்ற சீனப் போரியல் மேதை சன் சூ வின் கருத்துக்களை குறுகிய வளங்களுடன் குடாரப்பு தரையிறக்கத்தில் சாதித்த மிகச்சிறந்த தளபதி பிரிகேடியர் பால்ராஜ்.

போரில் புதிய உத்திகளையும், பெரும் வெற்றிகளையும் நிலைநாட்டிய கட்டளைத் தளபதிகளுக்கு உலகின் சரித்திரத்தில் நீங்காத ஒரு இடம் எப்போதும் இருப்பதுண்டு.

கி.மு 218-ஆம் ஆண்டுகளில் போரியலில் புதிய உத்திகளை அறிமுகப்படுத்தியவர் கானிபல். ரோமன் இராணுவத்தை திணறடித்த மிகச்சிறந்த போரியல் தளபதி இவர்.

வலிமை மிக்க எதிரியை பின்புறமாக தாக்கி அவர்களின் விநியோக வழியை மூடிய பின்னர், முற்றுகைச்சமரை நடத்தும் உத்திகளையும், புதிய படைக்கலங்களுடன் அதிர்ச்சிகரமான தாக்குதல்களை நடத்தும் உத்திகளையும் வகுத்து கொடுத்தவர் இந்த கானிபல். இவரது உத்திகளையே 1991 ஆம் ஆண்டு நடைபெற்ற ஈராக் போரில் பயன்படுத்தியதாக அமெரிக்காவின் கட்டளைத் தளபதி தெரிவித்திருந்ததும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் உலகப்போரின் சரித்திரத்தை மாற்றிய நோமன்டி தரையிறக்கத்தை வழிநடத்திய நேச நாட்டுப் படைகளின் தளபதி General Dwight D. Eisenhower என சாதனை படைத்த தளபதிகளின் பட்டியல் நீளமானது.

தமிழீழ வரலாற்றிலும் பல தளபதிகளின் வரலாறுகள் பதிவாகி இருந்தாலும், பிரிகேடியர் பால்ராஜின் போரியல் அனுபவம் வேறுபட்டது.

இந்திய இராணுவத்தின் முற்றுகைகளில் இருந்து மணலாற்றின் இதயபூமியை காப்பாற்றியதில் இருந்து, தற்போதைய அதிகாரிகள் பயிற்சிக் கல்லூரி வரையில் பிரிகேடியர் பால்ராஜின் போரியல் அனுபவங்கள் ஒரு போரியல் புத்தகத்திற்கு ஈடானது.



- 1990 களில் நடைபெற்ற மாங்குளம், கொக்காவில் படை முகாங்கள் தகர்ப்பு
- 1991 ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட ஆகாய கடல்வெளி சமர்
- 1993 களில் மேற்கொள்ளப்பட்ட மண்கிண்டிமலை படைமுகாம் தகர்ப்பு
- 1993 ஆம் ஆண்டு நவம்பர் மேற்கொள்ளப்பட்ட பூநகரி படை முகாம் தகர்ப்பு
- இதற்கு முன்னர் நடைபெற்ற யாழ்தேவி படை நடவடிக்கை முறியடிப்பு
- 1995 ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட புலிப்பாய்ச்சல் நடவடிக்கை
- 1996 ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட முல்லைத்தீவு முகாம் தகர்ப்பு (ஓயாத அலைகள் - 01)
- 1998 ஆம் ஆண்டு நடைபெற்ற பரந்தன் ஆட்டிலறி பீரங்கித்தளம் மீதான ஊடறுப்புச் சமர்
- 1998 ஆம் ஆண்டு பெப்ரவரி மற்றும் செப்ரெம்பரில் நடைபெற்ற கிளிநொச்சி தளம் தகர்ப்பு (ஓயாத அலைகள் - 02)
- 1999 ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட ஓயாத அலைகள் - 03
- 2000 ஆம் ஆண்டு நடைபெற்ற ஆனையிறவுப் பெரும்தளம் தகர்ப்பு
- தீச்சுவாலை முறியடிப்பு

என்பன பிரிகேடியர் பால்ராஜ் வழிநடத்திய மற்றும் முக்கிய பங்குவகித்த சமர்களில் முக்கியமானவை.

இவர் பங்கு கொண்ட ஒவ்வொரு சமர்களுக்கும் ஒவ்வொரு வரலாற்று முக்கியத்துவம் உள்ளது.





மண்கிண்டிமலை தாக்குதல் முதன் முதலில் 81 மி.மீ பீரங்கியை விடுதலைப் புலிகளுக்கு பெற்றுக்கொடுத்திருந்தது.

பூநகரிச் சமர் போர் டாங்கியையும், நீருந்து விசைப்படகுகளையும் பெற்றுக் கொடுத்திருந்தது.

முல்லைத்தீவுச் சமர் 122 மி.மீ பீரங்கிகளை பெற்றுக்கொடுத்திருந்ததுடன், இராணுவத்தின் 21 ஆவது படையணியின் 5-ஆவது பிரிகேட்டை முற்றாக அழித்திருந்தது.

இவ்வாறு இந்தச் சமர்களின் வரலாற்று முக்கியத்துவங்களும் அதனால் விடுதலைப் புலிகள் எட்டிய வளர்ச்சியும் அதிகமானவை.

1991 ஆம் ஆண்டு ஆனையிறவில் உக்கிரமடைந்த சமரை எதிர்கொள்ள விடுதலைப் புலிகள் சிறப்புப்படையை அமைத்த போது, விடுதலைப் புலிகளின் முதலாவது சிறப்புப் படை றெஜிமென்டான சாள்ஸ் அன்ரனி றெஜிமென்டின் முதலாவது கட்டளைத்தளபதியும் பிரிகேடியர் பால்ராஜ் தான்.

முல்லைத்தீவில் ஒரு பிரிகேட் படையணிகளை முற்றாக அழிக்கும் திறன் பெற்ற விடுதலைப் புலிகள், ஆனையிறவில் ஒரு டிவிசன் படையினரை முற்றாக அழிக்கும் நிலைக்கு உயர்ந்ததற்கு சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவும் அதன் கட்டளைத் தளபதி பிரிகேடியர் பால்ராஜ் முக்கிய பங்காற்றியிருந்ததை யாரும் மறந்துவிட முடியாது.

கிளிநொச்சி மற்றும் ஆனையிறவு சமர்களில் ஏற்பட்ட இழப்புக்களுடன் சிறிலங்கா இராணுவத்தின் 54 ஆவது படையணி கலைக்கப் பட்டதும் ஒரு போரியல் வரலாறு தான்.

எங்கே களமுனைகளில் தொய்வுகள் ஏற்பட்டாலும் அங்கு சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவும், பிரிகேடியர் பால்ராஜும் களமிறக்கப்படுவார்கள். திடீரென நடத்தப்படும் சிறப்புத்தாக்குதல்களுக்கும் இதே நிலைமைகள் தான்.

1993-களில் பூநகரி தளம் மீதான தவளைப் பாய்ச்சலுக்கு புலிகள் பயிற்சி எடுத்துக்கொண்டிருந்த வேளை இராணுவம் கிளாலியை நோக்கி யாழ்தேவி நடவடிக்கையை ஆரம்பித்தது.

யாழ்தேவியை தடம்புரளச் செய்ய ஒரு அதிரடி நடவடிக்கை தேவைப்பட்டது. பயிற்சி நடவடிக்கைகளில் எந்த மாற்றங்களும் ஏற்படாதவாறு இரண்டு கொம்பனி சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையினர் (ஏறத்தாழ 250 பேர்) பிரிகேடியர் பால்ராஜ் தலைமையில் களமிறக்கப்பட்டனர்.

பொட்டல் வெளிகளில் மண்ணுடன் மண்ணாக உருமறைந்து கிடந்த விடுதலைப் புலிகள் டாங்கிகள் சகிதம் நகர்ந்த படையினரை ஊடறுத்த போது, யாழ்தேவி தடம்புரண்டது.

ரி-55 டாங்கிகள் இரண்டும் தகர்க்கப்பட்டன. அவற்றில் ஒன்று நல்லூரில் உள்ள கிட்டு பூங்காவில் 1990 களின் நடுப்பகுதி வரை இருந்ததை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

'மிகச்சிறந்த போர்வீரன் தோல்விக்கான சாத்தியங்களில் இருந்து தனது படையணியை பின்னோக்கியே வைத்திருப்பான் ஆனால் எதிரியை தோற்கடிப்பதற்கான தருணத்தை அவன் தவற விடுவதில்லை' என்ற சீன போரியல் மேதை சன் சூ வின் கருத்துக்களுக்கான அர்த்தத்தை கற்பித்தவர் பிரிகேடியர் பால்ராஜ். இவர் வழிநடத்திய சமர்களே அதற்குச் சான்று பகரும்.



அராலி - கல்லுண்டாய் வெளியின் ஊடாக நகர்ந்து யாழ். குடாநாட்டை கைப்பற்றும் திட்டத்தை 1992-களில் பிரேமதாசா அரசு முன்னெடுத்த போது அதற்கான எதிர் நடவடிக்கைகளில் பிரிகேடியர் பால்ராஜ் முக்கிய பங்கு வகித்திருந்தார். அந்த நடவடிக்கையை தடுப்பதற்கு விடுதலைப் புலிகளிடம் இரண்டு திட்டங்கள் இருந்தன. ஒன்று இராணுவத்தின் வட போர்முனை கட்டளைப் பீடத்தை சிறப்பு நடவடிக்கை மூலம் தகர்ப்பது. அது தவறினால் அராலித்துறையின் ஊடாக நகரும் படையினரை இலகு காலாட் படையினர் மூலம் எதிர்கொள்வது.

புலனாய்வுதுறையும், சிறப்புப் படை கொமோண்டோக்களும் முதலாவது திட்டத்திற்கு அமைவாக செயற்பட்டுக்கொண்டிருக்க, பிரிகேடியர் பால்ராஜ் இரண்டாம் கட்ட நகர்வுக்கு தன்னை தயார்ப்படுத்திக் கொண்டிருந்தார். அராலித்துறை ஊடாக யாழ். நகர் நோக்கி நகரும் படையினரை கல்லுண்டாய் வெளியில் எதிர்த்துச் சமர் புரிவதற்கான ஆயத்தங்களில் அவர் மிகவும் தீவிரமாக செயற்பட்டுக் கொண்டிருந்தார்.

போரில் காயமடையும் வீரர்களை முதலில் சிகிச்சை அளிப்பதற்கு என நிலத்திற்கு அடியிலான பதுங்கு குழி ஒன்று நவாலியின் ஒருமுனையில் அமைக்கப்பட்டுக் கொண்டிருந்தது. போராளிகளும் மக்களும் அந்த வேலைகளில் முழுமூச்சாக ஈடுபட்டுக் கொண்டிருக்கையில், இராணுவ பச்சை நிறத்திலான பிக்-அப் வாகனம் ஒன்று சடுதியாக வந்து நின்றது.



அந்த வாகனத்தில் இருந்து இறங்கியது, வேறு யாரும் அல்ல, பிரிகேடியர் பால்ராஜ் தான். பதுங்குகுழியின் பாதுகாப்பை பார்வையிட்ட அவர், அந்த மண்ணில் அமர்ந்து சாதாரண போராளிகளுடன் கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டதும், அவர்களின் தேவைகளை கேட்டறிந்ததும் அங்கிருந்தவர்களின் உற்சாகத்தை பல மடங்கு அதிகரித்திருந்தது.



அது மட்டுமல்லாது, போராளிகளுடன் மிகவும் இயல்பாகவும், நெருக்கமாகவும் பழகும் தளபதி அவர். எந்தக் களமுனையானாலும், போர் என்று மூண்டுவிட்டால் போராளிகளுக்கு அருகில் எப்போதும் அவர் நிற்பார் என்று போராளி ஒருவர் தனது அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டார்.

பிரிகேடியர் பால்ராஜைப் பொறுத்த வரையில் அவர் ஒரு போரியல் புத்தகம். அவரின் வரலாற்றை நான்கு பக்க ஏ-4 காகிதத்தில் அடக்கிவிட முடியாது.

களமுனைகளில் அரிய பல வெற்றிகளை ஈட்டுவதற்கு ஈடாக மிகச்சிறந்த பல தளபதிகளை உருவாக்குவதும் ஒரு சிறந்த தளபதிக்கான அழகு. அதனையும் பிரிகேடியர் பால்ராஜ் மிகவும் தரமாகவே செய்து காட்டியிருந்தார். தற்போதைய களமுனைகளில் நிற்கும், அவரின் கைகளில் வளர்ந்த கட்டளைத் தளபதிகளின் வேகம் பல மடங்கானது.

தேசியத் தலைவரின் சிந்தனையில் பிரிகேடியர் பால்ராஜின் முயற்சியில் உருவான சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் கட்டளை அதிகாரியாக பிரிகேடியர் பால்ராஜ் தற்போது இல்லை. ஆனால் அவரால் உருவாக்கப்பட்ட மிகச்சிறந்த தளபதிகள் தற்போது அதனை வழிநடத்தி வருகின்றனர்.

போரின் கொடுமைகளுக்கு மத்தியில் இயற்கை காவு கொண்ட தளபதிகள் மற்றும் போராளிகளின் எண்ணிக்கைகளும் அதிகம்.

மேஜர் சோதியா, கேணல் ராஜு, தற்போது பிரிகேடியர் பால்ராஜ்.

விடுதலைப் புலிகளின் முதற் தாக்குதல் தளபதியும் திருமலை மண் தந்த முதல் போராளியுமான லெப். சீலன் 1983 களில் வீழுந்தபோது கலங்கி நின்ற உள்ளங்களில் உறுதியை பாய்ச்சியிருந்தது ஒரு வாசகம்.

அதாவது, 'இலட்சிய வேங்கைகள் இறப்பதுமில்லை, விடுதலைப் புலிகள் வீழ்வதுமில்லை' என்ற அந்த வாசகம், சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணியின் முதற் தளபதியின் இழப்பினால் உடைந்து போன உள்ளங்களை தூக்கி நிறுத்தவும் போதுமானது.





# லீமா

- கு. வீரா -

**பிரிகேடியர் பால்ராஜ்**



பிரபாகரப்
பெருந்தலைவன்
உருவாக்கி வைத்திருந்த
உற்சவமூர்த்தி.

தமிழீழ தளகர்த்தருள்
நிகரில்லாப் பெருவீரம்
நிரம்பப் பெற்ற
நெருப்புத் தளபதி.

களமுனைகளின்
கைராசிக்காரன்
லீமா எனும்
சங்கேதப் பெயரில்
சண்டைக் களங்களில்
சஞ்சாரம்செய்த
சரித்திரநாயகன்.

வெண்ணிறமேனி
எதையும்
விளங்கிக்கொள்ளும் இயல்பு
கண்களில் வீரம்
தினமும்
கடமைசெய்யும் உணர்வு
இப்படி
சொல்வதற்கு இன்னும்
ஆயிரம் ஆயிரம்
அரும்பெருமைகள்
அடங்கிய மேதை.

ஆர்ப்பாட்டமில்லாமல்
பல
அனுபவங்கள் கைவரப்பெற்ற
அற்புத ஆளுமையோன்.

ஆனையிறவின்
அடிமைச் சங்கிலியை
அறுத்தெறிய
அதிகம் பங்காற்றிய
அடையாளச் சின்னம்.

குடாரப்புக் கூட்டுக்குள்
குடியிருந்த
கொள்கைப்புலி
தமிழீழ நிலமெங்கும்
தாண்டித் தாண்டியே
வேண்டிய வரைக்கும்
வீரப்பணிசெய்த
முதல்வன்.

இதழோரப் புன்னகையில்
பலவற்றை
எடுத்தியம்பும்
மதிநுட்ப மறவன்.

சர்வதேச
படைத்துறைகளை
கரைத்துக் குடித்த
கம்பீரபுருசன்....
எதிரிகளின்
கனவிலும்
இடறும் பெயருக்கு
சொந்தக்காரன்.

போர்க்களங்களையே
வாழ்வாக்கி
வெற்றிவிலாசங்களின்
வேர்வரை சென்று
விசாரித்தவன்.

எதிரிகளின்
இரத்த அணுக்களின்
ஓட்டங்களைக் கூட





கட்டுப்படுத்திய
கட்டளைத்தளபதி.

வியர்வையையும்
குருதியையும்
ஏன்
உயிரையும்
களத்தில் சிந்துவதற்காகவே
சேமித்து வைத்திருந்த
சேனாதிபதி.

லீமா லீமா என
நடைபேசியில் வரு
முக்கிய வார்த்தை
போரின்
நடைமுறையையே
மாற்றிக்காட்டும்
அக்கினி மாத்திரை.

உன் பிரிவு
கவலைதான், கண்ணீர்தான்
இருந்தாலும்
உன் இதயத்துடிப்பு
நின்றுபோன நிகழ்வில்
பல இளைய
இதயங்களின் துடிப்பு
வேகம் பெற்றிருக்கிறது.

நீ வளர்த்தெடுத்த
தளபதிகளும் தானைகளும்
தீ வளர்த்து
திசையெல்லாம்....

சந்தேகமில்லை
வருங்கால
தமிழீழ தனியரசின்
படைத்துறைப் பல்கலைக்கழக
வளாகம்
நிமிர்ந்து நிற்கும் உன்
நினைவோடு.

அதற்குள்ளேயும்
ஆயிரம் ஆயிரம்
பால்ராஜ்கள்....



## வீரத்தின் அடையாளம்

- க. இசை -

சாவிலும் வாழ்வார் சிலரே
பால்ராஜூம் அதில் ஒருவனே
பால்ராஜ் குந்திவிட்டான் எழும்பமுடியாது
கூறியவன் சிங்களத்தின் படைத்தளபதி
பால்ராஜ் வீரத்தின் அடையாளம்
அதனால் கூறினான் போலும்
கடலேறித் தரையிறங்கிக் கைகோர்த்த வீரன்
உடன் நிற்பதற்கு ஆத்மபலம்
ஊட்டும் உள்ளத்தான்
கருவுற்று உதிர்ப்பார். சாவார்
சிலர் வாழ்வார் வரலாறாய்
அதில் பால்ராஜ் ஒருவன்.





# போர்க்களங்களின் புதியவரலாற்றுப் பெட்டகம்

- பவித்திரா -

*வன்னிமண் வனப்புடன் ஈன்ற எித்தவெம்*
*வரலாற்று வித்தகன் வானுலகம் சென்றனனே!*
*கன்னித் தமிழன்னை தன்மானம் காத்துநின்ற*
*கட்டிளம் காளைகற் பூரமாய்ப் போயினனே!*
*முன்னிலைத் தளபதியாய் முடிசூடி நின்றவெம்*
*முத்தான தத்துவம் முழுநிலவா யானதே!*
*சென்னியிற் பதித்தேநாம் தொழுதிடும் மாவீரனாய்ச்*
*செந்தமிழ்ச் செல்வன் சேர்ந்தனன் இறையே!*

*தலைவனை மூச்செனக் கொண்டிலங்கு தம்பியாய்த்*
*தமிழீழமே தன்னுயர் தாரக மந்திரமாய்*
*மலையெனத் திடமுடன் மாற்றான் படைக்கோர்*
*மன்னும் சிம்மசொப் பனமாய்த் திகழ்ந்து*
*நிலையிலா இவ்வுலக வாழ்வினில் நிறைமாந்தர்*
*நெஞ்சத்தில் ஒளிரும் நெய்விளக்காய்த் திகழ்*
*விலையிலாத் தன்வாழ் வீய்ந்தோன் தன்னுயர்*
*வீரவர லாற்றினை விதந்துரைக்க விழைந்தோம்!*

*தேனொத்த தமிழனாய்த் திகழுயர் தலைவனைத்*
*தேடினர் தீங்குசெய் இந்தியர் மணலாற்றினில்,*
*கானத்து விலங்குகளாய்க் கரிகாலனைச் சிறைப்பிடிக்கக்*
*காட்டாற்று வெள்ளமென வளைத்து நிற்கையில்*
*மானத்தை உயிரென மதித்துவாழ் மறவனாய்*
*மாசிலா வன்னிமகன் மழவன்பா லசேகரன்*
*ஈனத்துப் படையதன் இலக்கினை உடைத்து*
*இன்னுயிர் அண்ணனின் பொன்னுயிர் காத்தனன்!*

*கொக்குத் தொடுவாயின் கொடை யாய்க் கிடைத்தவன்*
*கொள்கையிற் பிறழ்விலாக் குலமகனாய் விளங்கிக்*
*கொக்காவில் மாங்குளம் கிளிநொச்சித் தாக்குதலில்*
*கொடியோராம் சிங்களத்தின் கொட்டம் அடக்கி*
*எங்காள மிட்டுக் கடற்காற்றுடன் மின்லென*
*எடுப்போடு எதிர்த்த படையெடுப்புத் தன்னைத்*
*தக்கதோர் தலைமை யெனத்தானே தோன்றித்*
*தடுத்தனன் முல்லையொடு மணலாற்றின் அழிவினை!*







சிங்களத்தின் தலைகொய் சீரிய படைகொள்
சார்ள்ஸ் அன்ரனியின் சிறப்புத் தளபதியாய்ப்
பொங்குதமிழ் மறவர்தம் புலிப்படை தன்னுயர்
புகழார்ந்த துணைப்படைத் தளகர்த் தனாய்ச்
செங்கதிராய்த் திளைத்துத் துன்னலர் தானையிற்
சுழன்று சிவப்பேற்றிச் சிதறிடச் செய்தோன்
மங்காத ஒளியெனத் துலங்கிடு மாணிக்கம்
மாண்பு மெய்தனில் விழுப்புண்பல கண்டனன்!

சூரியக் கதிரோடு முன்னேறிப் பாய்தலிற்
சூறா வளியெனக் கட்டளைகள் சுட்டிநின்றே
ஆரியர் படைதனை அடித்து விரட்டினன்!
ஆனையிறவுச் சுற்றுலா விடுதிதனைத் தகர்த்து,
வாரி யழிக்கவென வவுனியா நின்றபடை
வன்னி விக்கிரம நடவடிக்கை தொடுக்கவே
கூரிய நுண்ணறிவிற் குற்றமற்ற போர்புரிந்து
கொடும்பகை விரட்டிக் குன்றென நின்றனன்!

ஓயாத அலைகள் ஒன்றிரண்டு மூன்றென
ஓய்வின்றி உழைத்து ஆயுதங்கள் மீட்டுச்
சாயாத திண்மையில் ஜெயசிக்குறு தன்னிலும்
தகர்த்தழித்த யாழ்தேவி தீச்சுவாலை களிலும்
நாயகனாய் நின்றுமே படைநடத்தி வென்று
நானிலமும் மெச்சிட வாகைசூடி நின்றான்!
தாயாகத் தனைவளர்த்த அண்ணன்தன் எண்ணம்
தடையின்றி நிறைவேறத் தம்பிதனைக் கொடுத்தான்!

ஆண்டாண்டு காலமாய் அன்னியரின் ஆட்சிக்குள்
அகப்பட்டு நுடங்கிய ஆனையி றவுதன்னை
மீண்டும்நா மாண்டிட மெய்வருத்தம் நோக்காது
மிக்கவே பெற்றுத் தந்தோனாம் பால்ராஜ்
ஈண்டிங்கு பிறப்பான் எம்முயிரிற் கலந்தான்
இணையிலா வெற்றிகள் மென்மேலும் பெற்றிட
ஆண்டவன் திருநிழலிற் சேர்ந்தவன் தான்வளர்த்த
அரும்படை இயக்கியே அன்னைமண் மீட்பான்!

# பிரிகேடியர் பால்ராஜ்

## மீளும் நினைவுகள்

- புலனாய்வுத்துறைப் பெறுப்பாளர் ச.பொட்டு -

தளபதி பால்ராஜ் எம்மிடம் இருந்து பிரிந்துவிட்டார். ஆனால் அவர் எம்மிடம் இருந்து பிரியமாட்டார். தமிழ் மக்களின் மனங்களில் இருந்து மறைய மாட்டார். தமிழர்களின் வரலாற்றில் இருந்து மாறமாட்டார். மறைய மாட்டார். அடிமைப்பட்டுக்கிடந்த தமிழினத்தின் வரலாறு ஒரு சுதந்திர போராட்ட வரலாறாக மாறி, ஒரு போரியல் வரலாறாக, தமிழர்களின் போரியல் வரலாறாக மாற்றம் பெற்றதன் நாயகனாக வாழ்ந்தவர் பால்ராஜ். போரின் நாயகனாக போர்க்களத்தின் மத்தியில் நின்று வழி நடத்திய வீரத்தளபதியாக அவர் வாழ்ந்தார். எமது ஆக்கிரமிப்பாளர்களுக்கு எம்மை ஆக்கிரமிப்பவர்களுக்கு சிம்ம சொப்பனமாக விளங்கிய தளபதி பால்ராஜை கடைசி வரை அவர்களால் வீழ்த்திவிட முடியவில்லை. கொடிய நோய் - இயற்கை நோய் அவரை எம்மிடம் இருந்து பிரித்து சாவடைய வைத்துவிட்ட போதிலும் கூட அவருடைய வாழ்வு, அவருடைய வரலாறு, அவர் சாதித்தவைகள், போர் தொடர்பான அவருடைய கோட்பாடுகள், எண்ணங்கள் என்றென்றும் எம் மனங்களிலே நிலைத்து இருந்து, எம் மக்களது மனங்களிலே நிலைத்திருந்து தமிழர்களின் வீர விடுதலைக்கான ஒரு சுதந்திரபோர் இயக்கமாக எம்மை வழிநடத்தி நிற்கும். தமிழர்கள் அடிமைப்பட்டமைக்குக் காரணம் இராணுவ வளர்ச்சி இன்மை பலம் இன்மை என்பது நாம் அறிந்தவை. தமிழர்களின் வரலாறு வீரம் செறிந்ததாக புதிதாக எழுதப் புறப்பட்ட காலத்தில்





மிக முக்கிய நாயகனாக பால்ராஜ் விளங்குவார் என்பதில் எவருக்குமே கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

தலைவர் அவர்களது போரியல் சிந்தனைகளுக்கு வடிவம் கொடுப்பவராக, ஒரு போர்க்களத்தில் தளபதியானவன் எவ்வாறு தனது படைகளை வழிநடத்த வேண்டும் என்ற எண்ணத்திற்கு, அந்த வீரமிகு வழிகாட்டல் எவ்வாறு அமைய வேண்டும் என்ற எதிர்பார்பிற்கு மிகச் சிறந்த வாழுமுதாரணமாக செயற்பட்டவர் தளபதி பால்ராஜ். போர்க்களங்களிலே, அந்த போர்க்கள மையங்களிலே அவர் துணிவுடனும் திறனுடனும் பதறாமலும் நின்று போர்வீரர்களை வழிநடத்துகின்ற அந்த பண்பு அவருக்கே உரிய மிக உயர்ந்த பண்பாக இருந்தது. சாதாரணமாக எல்லோருக்கும் வாய்த்து விடாத அந்த பண்பு அவரது இயல்பான ஒன்றாக இயற்கையிலேயே அவருக்கு வாய்த்த ஒன்றாக இருந்தது என்றுதான் நாம் கூறவேண்டும். இந்திய இராணுவத்தினர் அவரை கொன்று விடுவதற்காக நடாத்திய ஒரு வழிமறிப்பு பதுங்கித்தாக்குதலில், அவர் உடனடியாக செயற்பட்டு உடனடியாக ஒரு முறியடிப்பு தாக்குதலை நடாத்தி இந்திய பராத்துருப்பினர் பலரை - நான் நினைக்கிறேன் ஒன்பது பராத்துருப்பினராக இருக்க வேண்டும் - அவரைக் கொல்ல வந்த பராத்துரப்பினரை அவர் உடனடியான பதிலடித்தாக்குதலின் மூலமாக கொன்றிருந்தார். அது எமக்கு ஒரு வெற்றிகரமான நடவடிக்கையாக மாறியிருந்தது. உண்மையில் அந்த வழிமறிப்புத் தாக்குதலில் கொலை வலயத்துக்குள்ளே அகப்பட்டுவிட்ட ஒரு அணியானது தன்னை பாதுகாத்துக்கொள்ளவே போரிடும். ஒரு நெருக்கடியாக அமையக்கூடிய வேளையிலே, அவர்களது கொலைவலயத்துக்குள்ளே நின்று கொண்டு அவர்களுக்கான பதுங்கித் தாக்குதல் முறியடிப்பை அவர் மேற்கொண்டிருந்தார். உண்மையில் பதுங்கித்தாக்குதலுக்கான முறியடிப்பு எவ்வாறு அமையவேண்டும் என்பதற்கான ஒரு மிகச் சிறந்த கோட்பாட்டு தத்துவமாக அவருடைய அந்த முறியடிப்புச் செயற்பாடு அமைந்திருந்தது. இளைய வயது பால்ராஜாக அவருடைய அந்த செயற்பாடுதான். தலைவர் அவர்களுக்கு அவரை ஒரு உயர்ந்த தளபதியாக ஆக்குவதற்கான அந்த ஆரம்ப புள்ளியாக அமைந்திருக்க வேண்டுமென நான் நினைக்கிறேன்.

இதே போன்று பிறிதொரு சந்தர்ப்பத்திலே எமது கடற்புலிகளின் சிறப்புத்தளபதி சூசை அவர்களும் இன்னும் பல பொறுப்பாளர்களும் ஒன்று கூடி நகர்ந்து கொண்டிருந்தார்கள் மணலாற்றுக் காட்டிலே தலைவர் அவர்களை சந்திப்பதற்காக. அவ்வேளையிலே அவர்களை பாதுகாத்து அழைத்து வருவதற்கான பொறுப்பு பால்ராஜ் அவர்களிடம் தலைவர் அவர்களால் வழங்கப்பட்டிருந்தது. இதே போன்று ஒரு பதுங்கித்தாக்குதல் அந்த நகர்வு அணிமீது மேற்கொண்ட போது பால்ராஜ் தனது இயல்பான துணிச்சலுடனும் திறனுடனும் ஒரு பதுங்கித்தாக்குதலுக்கான முறியடிப்புச் சண்டையை உடனே தொடங்கி அங்கு வந்து கொண்டிருந்த தளபதிகளை காப்பாற்றினார்; பொறுப்பாளர்களை காப்பாற்றினார். பதுங்கித் தாக்குதல்களை முறியடித்தல் என்ற அந்த விடயமானது, தளபதி பால்ராஜ் அவர்களினுடைய ஒரு கோட்பாடாக தமிழீழ விடுதலைப் போராட்டம் முழுமைக்கும், ஏன் ஒரு இராணுவ கோட்பாட்டிற்கான ஒரு சிந்தனையாக முன்வைக்கப்படக் கூடிய மிகச்சிறந்த கோட்பாடாக அது இருக்கும் என நினைக்கிறேன்.

கொக்குத்தொடுவாய் அவருடைய சொந்த இடமாக இருந்தது. மிக இளவயதிலேயே காடும் கிராமப்புறமும் சார்ந்த வாழ்க்கையை மேற்கொண்டிருந்ததால் கிராம மக்களினுடைய வாழ்வு அவருக்கு மிகவும் பழக்கமானதாக இருந்தது. ஆனால் அந்த கிராம வாழ்விற்குள்ளும் மக்களை வழிநடத்துவதற்கான ஒரு அரசியல் சிந்தனை அவரிடம் இருந்தது. பால்ராஜ் அவர்கள் எங்கள் எல்லோருடனும், தனது நெருங்கிப் பழகும் நண்பர்களுடனும் உரையாடும் போது ஒன்றை கூறுவார்.

சிறந்த அரசியல் போராளியானவன் சிறந்த இராணுவ வீரனாக இருக்க வேண்டும் என்று. மக்களுக்காக இராணுவ ரீதியாக போராடுவதற்கு தன்னைக் கொடுத்து விடுதலைக்காக அர்ப்பணித்துப் போராடுவதற்கு ஆன தயார் நிலையும், அதன் இடர்களையும், போரின் வலியையும் விளங்கியவன் தான் ஒரு அரசியல் போராளியாக விளங்க முடியும் என்பது அவருடைய ஒரு கருத்தாக இருந்தது. அவர் ஒன்றை வலியுறுத்துவார். ஒவ்வொரு அங்குல நிலத்தையும் மீட்பதற்கு அல்லது எதிரி எமது நிலத்தை மீட்காமல் தடுப்பதற்கு நாம் சிந்துகின்ற இரத்தத்தின் விலை தெரிந்தவர்கள் அந்த அரசியலை நடத்துபவர்களாக இருக்க வேண்டுமென்று. அவர் தன்னுடைய தனிப்பட்ட கருத்தாக இதை அவர் கூறிக்கொள்வார்.

போர்க்களத்திலே போராளிகளின் மனதை, இளநிலை போராளிகளின் மனதை கணிப்பிடுவதில், அவர்களை ஊக்கப்படுத்துவதில் தளபதி பால்ராஜ் அவர்கள் எப்போதும் கவனம் எடுப்பார். போராளிகளின் உளவியலை உணர்ந்து அவர்களை ஊக்கப்படுத்துவதில் அவர் கூடுதல் கவனம் எடுப்பார். ஒரு சம்பவத்தை இங்கு கூறலாம் என நினைக்கிறேன். இது ஒரு விபத்துச் சம்பவம்.

இயக்கத்தில் புதிதாக, இயக்கத்தில் அல்ல ஒரு மக்கள் படை கட்டுமானமாக அல்லது துணைப்படை கட்டுமானமாக புதிதாக இணைந்த பொதுமக்களைக்கொண்ட ஒரு படையணிக்கு களமுனையிலே பயிற்ச்சி வழங்கிக்கொண்டிருந்தார் பால்ராஜ் அவர்கள். அந்த சம்பவத்திலே அவரால் நேரடியாக கைக்குண்டு எறிதலுக்கான பயிற்சி வழங்கப்பட்டுக்கொண்டிருந்தது. புதிய போராளி ஒருவரால் வெடிக்கும் நிலைக்கு கொண்டுவரப்பட்ட கைக்குண்டானது தவறுதலாக இவர்கள் இருந்த பதுங்குகுழிக்குள் கைவிடப்பட்டு விட்டது. அதாவது எறிந்த குண்டு திரும்பி இவர்களது பதுங்கு குழிக்குள் உருண்டு வந்து விட்டது. அங்கு இருந்த மெய்ப்பாதுகாவலர்களால் இவர் பாதுகாக்கப்படுகின்றார். மிகவும் அதிஸ்டவசமாக கைக்குண்டானது அந்தப் பதுங்குகுழிக்குள் இருந்த சிறு குன்றுக்குள் உருண்டு சென்றதனால் அங்கே சேதமும் குறைவாக இருந்து விட்டது. மூவருக்கு மட்டும் காயம் ஏறப்பட்டுவிட்டது. அங்கு இளநிலைப் போராளிகள் பதட்டமாகவும், குண்டை கைதவறிவிட்டவர் அழுதுகொண்டிருப்பதுமான அந்த நிலையிலேயே தளபதி பால்ராஜ் அவர்கள் அனைவரையும் ஊக்கப்படுத்துவதில் ஒரு சிறந்த முன்னுதாரணமாகச் செயற்பட்டார். அவர் அங்கு காயப்பட்ட மூவரையும் மருத்துவத்திற்கு அழைத்துச்சென்று உடனடியாகவே அவர்களது காயத்திற்கு சிகிச்சை முடித்து அவர்களை அழைத்து வந்து, இதோ உங்கள் காயப்பட்டவர்கள் தங்கள் அனுபவத்தை உங்களுக்கு கூறுவார்கள் என்று நகைச்சுசையாக கூறி அவர்களைக் கொண்டே அந்த விடயத்தை திரும்பக் கூறி தொடர்ந்து அந்த பயிற்சியை வழங்கி, அந்த குண்டை தவறவிட்டவரை சரியாக திரும்பவும் ஒரு முறை குண்டை வீச வைத்து மற்றவர்களுக்குமான பயிற்சியை முழுமையாக நின்று கொடுத்து அவர்களை மனம் சோராமல் ஊக்குவித்து ஒரு சிறந்த உளவியல் ஆசானாக அவர்களை போர்க்களத்திலே உற்சாகப்படுத்துகின்ற ஒரு பண்புமிக்க இராணுவ தலைமைத்துவத்தை அங்கே அவர் வெளிப்படுத்தினார்.



இந்தப் போராளிகளை உளவியல் ரீதியாக விளங்கிக் கொள்ளுதல் என்பது தமிழர்களுக்கான போரியல் தலைமைத்துவத்தில் ஒரு மிக முக்கியமான விடயம். நாங்கள் சிறந்த பயிற்சியைக்கொண்ட ஒரு இராணுவத்தை உருவாக்கவில்லை. ஆனால் இராணுவமாக செயற்பட்டு வருகின்றோம். இராணுவத்துடன் போரிடுகின்றோம். அங்கே மனஉறுதியை முதன்மையாக கொண்டே அனைத்து விடயங்களும் தீர்மானிக்கப்படுகின்றன. ஆட்பலம், ஆயுத பலங்களுக்கு அப்பால் அந்த மன உறுதியை வளர்த்தல் என்பதே எமது தமிழர்களுடைய இராணுவ பலமாக இங்கே இருக்கின்றது. அந்த மனஉறுதியை வளர்ப்பதில் பால்ராஜ் அவர்கள் சிறந்த களமுனைத் தளபதியாக செயற்பட்டார்.





பால்ராஜ்யை பற்றி நினைக்கின்ற வேளையிலே நான் ஒன்றை கூற வேண்டுமென விரும்புகிறேன். பால்ராஜ் அவர்கள் போரினால் அல்ல நோயினால் வீழ்ந்தார் என்பது மனதை பிழியும் விடயம். அதேவேளை எதிரியால் அவரை வீழ்த்தமுடியவில்லை என்பது எந்த வேளையிலும் எதிரியிடம் அவர் வீழ்ந்துவிடவில்லை என்பது நாம் எல்லோரும் பெருமைப்படும் விடயம். ஆனால் அவர் வீழ்ந்து விடாமல் இருப்பதற்கான போர்க்களத் தளபதியாக இல்லை. வீழ்ந்து விட தயாராக இருக்கின்ற போர்க்கள தளபதியாகவே செயற்பட்டார். பல்வேறு தடவைகளில் அவர் பாரிய விழுப்புண்களை எய்தினார். போர்க்களத்தின் மையத்திலே நின்று செயற்படும் ஒருவனுக்கு இயல்பாகவே வரக்கூடிய போர்க்காயங்கள் அவரது உடலை பெரும் பாதிப்புக்குள்ளாக்கின. பிற்காலத்திலே அவருக்கு வந்த நீரிழிவு நோய் கூட அவர் பெரிய காயங்களை சந்தித்ததாலும், அந்த காயங்களினால் அவர் தொடர்ச்சியாக மிக நீண்ட மருத்துவ சிகிச்சையில் இருக்க வேண்டி வந்ததும் ஒரு பெரிய காரணமாக இருக்கிறது. அவருடன் பழகியவர்களுக்கு தெரியும் அவருடைய கால் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டு இருந்தது என்று. இவ்வளவு போர்களத்தை வழிநடத்திய இந்த வீரனுக்கு, இந்த மாவீரனுக்கு ஒரு வீரச்சாவு கிடைக்காமல் நோயினால் வீழ்ந்தான் என்ற வரலாறு வந்து விட்டதே என்று வருத்தப்படுவோரும் உண்டு. நான் அப்படி கூறமாட்டேன். போர்க்களத்திலே வீழ்வதற்கான பல்வேறு சந்தர்பங்களை அவர் கொண்டிருந்தார். சாதாரண மனிதர்களுக்கு வேண்டுமானால் அது போர்க்களத்தில் வீழ்தல் என்பது பெருமையாக இருக்கலாம். ஆனால் பால்ராஜுக்கு அப்படி அல்ல. அவர் வரலாற்றைப்படைத்தவர், வரலாற்றுக்கான சமர்களை வழிநடத்தி வென்றவர். அந்த சமருக்காக தன்னுடைய குருதியை கொடுத்து அந்த போர்களத்திலே நின்று சுழன்று போராடி வழிநடத்தியவர். அவருடைய சாவு எப்படி வந்தது என்பது அல்ல, அந்த சாவுக்குள்ளும் அவர் எப்படி வாழ்ந்தார், தமிழர்களுக்கான வீர விடுதலைக்கான வரலாற்றை தனது வாழ்வினூடாக எப்படி நகர்த்தினார் என்பதே நாம் இங்கு நோக்க வேண்டியது.



தமிழ்மக்களின் வீர விடுதலை வரலாற்று நாயகனாக அவர் வாழ்ந்தார். ஆகவே பால்ராஜின் சாவைப்பற்றி அல்ல அவரின் வாழ்வைப்பற்றி நாம் பெருமைப் படுவோம். அவருடைய வாழ்வு தமிழர்களின் விடுதலைக்கான ஒரு வரலாற்றின் இன்றியமையாத அத்தியாயமாக பதிந்துவிட்டது என்பதே அவருக் கான பெருமை.

72

# பிரிகேடியர் பால்ராஜ்
## மீளும் நினைவுகள்

- சமராக்கப் பிரிவுப் பொறுப்பாளர் யோ.செ.யோகி -

பிரிகேடியர் பால்ராஜ் அவர்களை நான் முதன் முதலாக இந்தியப்படை இங்கு வந்த போதுதான் சந்திக்கின்றேன். அதாவது புதுக்குடியிருப்பிலே இருந்து மணலாற்றுக்கு என்னை அழைத்துச் செல்வதற்காக ஒழுங்குசெய்யப்பட்டபோது. அப்போது ஒரு உளவுபொறியிலே ஒருவர் வந்து என்னை அழைத்துச் செல்கிறார். இந்தியப்படை பல்வேறு இடங்களிலே நிலைகொண்டிருக்கின்ற நேரத்திலே, எங்கே இந்தியப்படை நிற்கலாம் என்று தெரியாத ஒரு சூழலிலே அவர் என்னை அழைத்துச் செல்கின்றார். அங்கே நாயாற்றுப்பாலத்திலே வைத்து என்னை மறுபக்கம் நிற்கின்றவரிடம் பொறுப்பு கொடுக்கின்றபோது, போகும் போது நாங்கள் பேசிக்கொண்டு தான் போகின்றோம். ஆனால் நான் அவருடைய பெயரை கேட்கவில்லை. அவர் ஒரு சாரத்தோடு





அந்த உளவுபொறியை ஓட்டிக்கொண்டு வந்தார். நாயாற்றுப்பாலத்திலே நான் விடைபெறுகின்ற பொழுது அவருடை பெயரைக் கேட்டேன். அவர் அப்போது பால்ராஜ் என்று சொன்னார். அதுதான் நானும் அவரும் முதன்முதலாக சந்தித்த சந்திப்பு.

பின்னாளிலே அந்த மணலாற்றுக் காட்டுப்பகுதியிலே, அதாவது யாழ்ப்பாணத்தி லிருந்து தலைவர் மணலாற்றுக் காட்டுப் பகுதிக்கு வந்தபோது அங்கு அவருக்கு பாதுகாப்பு வழங்க என மேஜர் பசீலனால் விடப்பட்ட போராளிகளிலே பால்ராஜும் ஒருவர். அடுத்தவர் நவம். தங்கேஸ் இப்படி பலர் இருந்தார்கள். பால்ராஜ் அவர்களும் அந்தப் பாதுகாப்பிற்கான பணியிலே ஈடுபட்டிருந்த காரணத்தினாலே அவர் அடிக்கடி அங்கே சென்று தலைவரை சந்திக்கின்ற வழக்கம் இருந்தது. அந்தக் காலத்திலே தான் தலைவர் அவர்கள் பால்ராஜ் அவர்களை சரியான முறையிலே அடையாளம் காணுகின்றார்.

பால்ராஜ் அவர்கள் ஒரு சிறந்த போராளி, தனது இலக்கை நோக்கி எப்போதுமே திட்டமிட்டு செயல்படுகின்ற ஒருவர். ஒரு வகையினிலே சொன்னால் போராட்டத்தோடே வாழ்ந்த ஒரு போராளி. அதாவது 84-ஆம் ஆண்டிலிருந்து நேற்று சாவடைகின்ற வரை அவருடைய வாழ்கை என்பது போராட்டத்துடனேயே கழிந்தது. அப்படியான ஒரு போராளி.

காலத்திற்குக்காலம் போராட்டத்திலே வீரத்தின் உச்சமாக சிலரைப் பார்ப்பது வழக்கம். ஒரு வீரத்தின் குறியீடாக சிலரை பார்த்துப் போற்றுவது வழக்கம். அந்த வகையிலே நீண்டகாலமாக எங்கள் போராட்டத்தின் வீரத்தின் உச்சக்குறியீடாக பால்ராஜ் அவர்கள் விளங்கினார் என்பதை யாரும் மறக்க முடியாது. ஒரு மாபெரும் வீரன் எதிரியைக் கண்டு அஞ்சாத வீரன். களமுனைகளிலே முன்னாலே தேவைப்படுகின்றபோது அச்சமின்றி நகர்கின்ற வீரன் என்றதிலே யாருக்குமே ஐயம் இருந்ததில்லை.



ஆரம்ப கட்டத்திலே, அதாவது காண்டீபன் அவர்களோடு ஐம்பது சொட்கன்களை ஏற்றிக்கொண்டு போகின்ற பொழுது ஒரு பதுங்கித்தாக்குதலிலே அம்பிடுகிறார். அதில் தப்பியவர்கள் ஒரு சிலர் தான். அதில் ஒன்று பால்ராஜ். இன்னும் ஒருவர் காசன். இன்னும் ஒருவரும் தப்பியிருக்க வேண்டும் என நினைக்கின்றேன். அதன் பின்னாலே அந்தக் காயத்தோடு இந்தியா சென்று ஒன்பதாவது பயிற்சி பாசறையிலே பயிற்சி பெற்று இங்கு திரும்பிவந்தார். ஒரு நீண்ட போராட்ட வரலாற்றிலே அவருடைய கணிசமான பதுங்கித்தாக்குதல்களிலே எதைச் சொல்வது எதை விடுவது என்று சொல்ல முடியாத ஒரு நெருக்கடி உண்டு. அவர் காலத்திற்கு காலம் உத்திகளை மாற்றுவார். விரைவாக செயற்படுவார். சிங்களப் படையைப் பொறுத்தவரை ஒரு பதிவு இருந்தது - பால்ராஜ் ஓரிடத்திலேயே நிலை கொண்டு விட்டால் பால்ராஜை அங்கிருந்து அகற்ற முடியாது என்ற நிலைப்பாடு - அந்த வகையிலே அவர் வீரமாக செயற்பட்டார்.

91 ஏப்ரல் 10ம் திகதி அவர் சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையினுடைய, அதாவது ஏறத்தாழ ஒரு ஆயிரம் பேர் கொண்ட படையணியின் பொறுப்பாளராக பொறுப்பேற்றுக் கொண்டார். அதன் பின்னாலே வன்னி விக்கிரம, மின்னல் இப்படியாக பல்வேறுபட்ட தாக்குதல்களிலே அவர் ஒரு தளபதியாக நின்று செயற்பட்டார். வளலாயிலே 7 கிலோ மீற்றர் அடங்கிய காவலரண்களை அழித்ததிலே அவருடைய பங்களிப்பு மிகப்பெரியது.

இந்தியப்படை காலப் போராட்டங்களாக இருந்தாலும் சரி பின்பு நடந்த பல்வேறுபட்ட போராட்டங்களாக இருந்தாலும் சரி, ஜெயச்சிக்குறு ஆக இருக்கலாம், ஓயாத அலை 01, 02, 03 ஆக இருக்கலாம் இப்படியாக பல்வேறுபட்ட போராட்டங்களாக இருந்தாலும் அவருடைய பங்களிப்பு இருக்கவே செய்தது.

அவரைத் தெளிவாக வெளியிலே பலருக்கு தெரிந்திருந்தாலும் கூட அதாவது வீரத்தின் தன்மையை, இடுக்கண் அழியாத தன்மையை, ஒரு ஓர்மத்தை, ஒரு திட்டமிடல் ஆற்றல் அவருக்குள் இருப்பதை வெளிப்படுத்துகின்றது குடாரப்பு தரையிறக்கம் தான். அங்கே இரண்டு பக்கமும் படைகளுக்கு நடுவிலே பால்ராஜ் அவர்கள் நின்று கொண்டிருந்தார். பால்ராஜ் தனியச் செய்த ஒரு முயற்சி அல்ல அது. பல்வேறு ஆட்களோடு கூட்டாக ஏற்படுத்தப்பட்ட அந்த குடாரப்பு தரையிறக்கத்திலே யாழினி இருந்தார்கள். துர்க்கா இருந்தார்கள், இராஜசிங்கம் இருந்தார், கோபித் இருந்தார். இப்படியாக பல்வேறுபேர் அதற்குள் சம்பந்தப்பட்டிருந்தாலும் கூட ஒரு தனிமனிதனை மையமாக வைத்துத்தான் அந்த குடாரப்பு தரையிறக்கம் என்பது சுழன்றது. அதிலே பதிவு ஒன்று உண்டு.

முதன்முதலாக அங்கே போய் அங்கே மறிப்பு துண்டிப்பு என்று - ஒன்று ஆனையிறவை பார்கின்ற நிலை, அடுத்து யாழ்ப்பாணத்தை பார்கின்ற வகையிலே இவர் கோடு போட்டு நிற்கின்ற போது, முதல் நாள் இரண்டாம் நாள் அணிகள் சரியாக போயச்சேரவில்லை. சிக்கல் மிகுந்த நேரம் அந்த நேரத்திலே பால்ராஜ் அவர்கள் அந்த முதலாவது கோட்டிற்கு வருகின்றார். காலையிலே வருகிறார். நான் நிற்கிறேன் பயம் இல்லாமல் நில்லுங்கள் என்று சொல்லி விட்டு செல்கின்றார். அதே போல இரண்டாம் திகதி ஒரு பாரிய தாக்குதல். அந்தக் கண்டல் கரையை மூடி படையினர். பால்ராஜை உயிரோடு அல்லது அவரது உடலை கொன்ற நிலையோடு எடுப்பது என்ற நிலையோடு சிங்களப்படை வந்து நிற்கின்றது. அந்த நேரத்திலே ராங்கிகள் எல்லாம் அண்மையிலே வந்து நிற்கின்றன.

அவரைப் பிடிப்பதற்காக வந்த ராங்கி எங்கே தப்பியோடுவது என்று திசை தெரியாமல் திசைமாறிக்கொண்டு இருக்கின்றது. அந்த நிலையிலே பால்ராஜ் நிற்கின்றார். ஒரு போராளியினுடைய குறிப்பொன்றை அண்மையிலே பார்த்தோம். அட ராங்கி வந்து விட்டதடா நாங்கள் ஓடுவோம் என்றோ, தப்பி அங்கால போய் எங்காவது காப்பெடுப்போம் என்று நகர வெளிக்கிட்டவேளை, அல்லது ஒரு வகையிலே ஓட வெளிக்கிட்ட வேளை நாங்கள் திரும்பிப் பார்த்தோம். அங்கே பால்ராஜ் நிற்கின்றார். அட இஞ்சை பால்ராஜ் அண்ணையே நிற்கிறார். நாங்கள் எங்கே போறது என்று போட்டு நாங்கள் அங்கே நின்றோம்... என்று அந்த பதிவு வருகிறது. ராங்கிகள் அங்கே நிற்கின்றன. அதைப் பார்க்கின்ற தூரத்திலே 20, 30, 40 மீற்றருக்குள்ளே பால்ராஜ் அவர்கள் நிற்கின்றார்கள். அவரைத் தேடி வந்த ராங்கி அவர் அங்கே நிற்பதை கண்டதும் அறியாமல் எங்கே தப்பி ஓடுவதென்று திகைத்து நின்ற அந்தக் காட்சி வரலாற்றிலே மிக முக்கியமானது. இப்படியாக பால்ராஜ் அவர்களைப்பற்றி நாங்கள் நிறையவே பதிவு செய்யலாம்.



இந்த முந்திரியக்குளம் தகர்ப்பின்போது ஒன்று சொல்கிறார். பசீலன் அவர்களினுடைய தலைமையிலே முந்திரியக்குளத்திலே நடந்த தாக்குதலின் போது, கடைசியாக இவர்கள் தாக்கி முடிந்தவுடன் எல்லோரும் கொல்லப்பட்டு விட்டார்கள், ஒரு படைவீரன் மட்டும் ஒரு பள்ளத்துக்குள் இருந்து சுட்டுக்கொண்டு இருக்கிறார். அப்ப பசீலன் சொல்கிறார் அவனை சுடு என்று, அப்ப பால்ராஜ் அவர்கள் பகிடியாக சொல்கிறார். என்ன சொன்னார் - கரணம் தப்பினால் முன்னால இருக்கிறவன் சுடுவான். திரும்பிப்பார்த்தால் பசீலன் சுட்டாலும் சுட்டுப்போடுவான் இப்படியான ஒரு சிக்கல். பார்த்துக் கொண்டிருந்தேன் - அவன் கீழே குனிவான் பள்ளத்துக்குள்ளே, பிறகு நிமிர்ந்து சுடுவான், பிறகு குனிவான், பிறகு, அந்த அப்படி என்ற விநாடிக்குள்ளே நான் பாய்ந்து சென்று அடுத்த முறை தலைநிமிர்வதற்குள்ளே அவனை சுட்டேன் என்று அவர் பதிவு செய்கின்றார். அது அவருடைய இயல்பு அந்த வீரத்தின் இயல்பு. அவருடன் நீண்ட நேரம் நாங்கள் உரையாடி இருக்கிறோம். அப்போது அவருடைய வீர மரபுகளை நாங்கள் பார்த்திருக்கின்றோம்.



நாங்கள் பகிடியாகக் கூட சொல்வோம் - நாங்கள் கொஞ்ச காவலரண்களை அழித்துவிட்டு



வருகின்றோம். வந்தபோது தலைவர் சந்தோசமாக இருப்பார் என்று பார்த்தால் தலைவர் அவ்வளவு சந்தோசமாக இல்லை. ஏன் இவர் இன்னும் ஒரு கொஞ்ச காவலரண்களை அழித்துவிட்டு வரலாம் தானே. இன்னும் கொஞ்ச காவலரண்களை அளித்து விட்டு வந்து பார்த்தால், அவர் அப்பவும் சந்தோசமாக இல்லை. அதற்கு பிறகு நாற்பது காவலரண்களை அடிச்சுப்போட்டு வருகிறோம். வந்தால் அவர் பிசியாக இருக்கிறார். என்ன என்று கேட்டால், ஏன் அங்க சின்ன சின்ன பாசறைகள் கிடந்ததுதானே அவைகளை அழிச்சு இருக்கலாம் தானே என்று அவர் கேட்கிறார். சரி அடிப்பம் என்று வெளிக்கிடோம் என்று சொன்னார்.

அதாவது தலைவருக்கும் அவருக்கும் இருந்த உறவு என்பது ஒரு காலத்திலே ஒரு அபூர்வமாக ஏற்படுகின்ற ஒரு கூட்டு. இவர் எதை விரும்பினாரோ அதை செய்கின்ற செயல்வீரனாக, எந்த இலக்கை அடைய வேண்டும் என்று தலைவர் எண்ணுகின்றாரோ அதை நிறைவேற்றுகின்ற இயல்பை உடையவராக முற்றுமுழுதாக போருக்குள்ளே வாழ்ந்தவராக இருந்தார்.

அவரைப் பற்றி இன்னும் ஒரு பதிவை சொல்ல விரும்புகிறேன். அவர் வேவு எடுக்க ஆட்களை அனுப்புவார். வேவுக்குப் போனவர்கள் இரவு 1 மணி 2 மணிக்கு வரக்கூடும். அந்த நேரத்திலே பால்ராஜ் அந்த காவல் கடமைகளை அல்லது கோடுகளை பார்த்து விட்டு வந்து வேவு செய்தவர்களுக்காக காத்திருப்பார். வந்தபின்பு அவர்களிடம் இருந்து ஒவ்வொரு ஒவ்வொரு விடயமாகக் கேட்டுபார். எங்கே வரவு இருந்தது, எங்கே குழவு இருந்தது, எங்கே அவன் நிண்டான், இவன் நிண்டான், அவ்வளவையும் குறிப்பார். அந்த வேவுக்குப் போனவனுக்கு இவருக்கு திருப்தியான பதில் சொல்லுவது மிகக் கடினம். 1 மணி, 2 மணி, 3 மணி என்று விழித்திருந்து அந்த தகவல்கள் எல்லாம் விடுத்து விடுத்து, வேவு எல்லாம் சரியாக முடிவடைகின்ற நேரத்திலே, அந்த இறுக்கமான நிலைகளை தானும் போய் அந்த



முன்னிலையிலே நின்று அந்த வேவைப் பார்த்து அது சரிதான் என்று உறுதி செய்த பின்னர்தான் தாக்குதலை நடாத்துகின்ற ஒரு பணியை செய்கின்ற வீரனாக இருந்தார்.

பால்ராஜைப் பற்றி நாங்கள் நிறையவே பேச முடியும். இந்த போராட்டத்தினுடைய ஒரு நீண்ட வரலாற்றிலே அவருடைய தாக்குதல்கள் பல உண்டு. அவற்றை இங்கே நான் தனித்து பதிவு செய்ய முடியாது. பல்வேறு ஆட்கள் அதை பதிவு செய்ய வேண்டும். இது ஒரு நீண்ட வரலாறு. மிகப்பெரிய வீரனின் வரலாறு. அந்த வரலாற்றிலே அவரைப்பற்றி நான் ஒரு குறியீடாகத்தான் பேசினேன். நான் அவரோடு குறுகிய காலம் பழகி இருக்கின்றேன். குறுகியகாலம் என்கின்ற போது போராட்ட களத்தில் குறுகிய காலம், மற்றபடி அவருடன் நீண்டகாலம் பழகி இருக்கிறேன். மணலாற்றுக்காட்டுக்குள் இந்திய அடிபாட்டுக் காலத்திலே அவரோடு அந்த மணலாற்றுக் காடு முழுக்க சுற்றித் திரிந்திருக்கிறேன். சுற்றித்திரிகின்ற போது ஒரு சிறு சத்தம் கேட்டால் போதும், பால்ராஜ் உடனே நிலை எடுத்து நிற்கின்றதைப் பாாத்து வியந்து நின்றிருக்கின்றேன். அவரோடு நிறைய வாழ்ந்து இருக்கின்றேன். ஒரு விதத்திலே எனக்கு ஒரு வித மகிழ்ச்சி ஒன்று உண்டு. நான் மணலாற்றுக் காட்டிலே இருந்த போது எனக்கு தலைவர் ஒரு சொட்கண் தந்திருந்தார். இதை கொண்டு திரியுங்கள் என்று. பிறகு இரண்டு கோல் கொமோண்டோக்கள் இருந்த போது ஒன்றை நவத்திடம் கொடுத்தார். ஒன்றை என்னிடம் தந்தார். பால்ராஜ் அவர்கள் அந்தக் காலத்திலே காயப்பட்டு வந்த போது என்னிடம் கேட்டார். இந்த கோல்ட் கொமோண்டக்களை என்னிடம் தாருங்கள் என்று, நான் அவரிடம் கொடுத்தேன். அவர் அதை நீண்டகாலம் வைத்திருந்தார். அது எனக்கு மகிழ்ச்சியான ஒரு பெருமை தருகின்ற ஒரு நிகழ்ச்சியாக இருந்தது.



என்னைப் பொறுத்தவரையில் தனிப்பட்ட முறையிலே நீண்டகாலம் நெருங்கி வாழ்ந்த நெருங்கிய ஒரு நண்பர் - போராட்டத்தைப் பொறுத்தவரையிலே, இந்த தமிழீழ விடுதலைப் புலிகள் என்ற போராட்ட வீரர்களிலே ஒரு உச்சக்கட்ட வீரத்தின் குறியீடாக விளங்கிய அதில் பலரை சொல்லலாம். ஆனால் அதில் நின்று சற்று மிஞ்சி விளங்கிய வீரர்களில் ஒருவராக நீண்டகாலம் மக்களின் மனதிலே 'இவன்தான் வீரன்' என்ற ஒரு மனப்பதிவை ஏற்படுத்திய ஒரு மிகப்பெரிய மாவீரனின் சாவு. அந்த சாவை நாங்கள் இங்கு நினைவுகூருகின்ற போது நாங்கள் இப்படி எத்தனையோ சாவுகளை வீரச்சாவுகளை சந்தித்திருகிறோம். நாங்கள் உங்கள் பணியை எடுத்துச் செல்வோம்.

இந்த மாவீரன் கொக்குத்தொடுவாயில் இருந்து 1982ம் ஆண்டு இடம்பெயர்ந்தார். அந்த மண்ணை நாங்கள் மீட்போம்; இழந்த மண்ணை நாங்கள் மீட்போம். தமிழீழம் முழுவதுமே எங்கள் தேசியக் கொடி ஏற்றி வைத்து, இந்த மாவீரனுக்கு மட்டுமல்ல எங்களோடு போராடி உயிர்துறந்த மாவீரர்களுக்கு எங்கள் கடமையை நிறைவு செய்வோம்.







# நினைத்ததை முடிக்கும் நெருப்பு மனிதன்

- வேலணையூர் சுரேஸ் -

தளபதி பால்ராஜ்
தன்நிலை தளர்ந்து
தவறியும் விழாத வானத்துச் சூரியன்
கட்டுண்டு கிடந்த இனத்தில்
கருக்கொண்ட மானத்து வீரியன்
பார்க்கும்போது பரிவும்
பழகும்போது கனிவும்
பூக்கும் பூப்போல் பொலிவும்
எல்லாமுமாகி விளங்கிய
வெண்ணிற மேனியன் பால்ராஜ்.

கொக்குத் தொடுவாயில் உதித்து
திக்குப் பலவாயும் அறிந்த திறலோன்
முற்றுகைக்குள் பல தகர்த்து
முகாம்கள் பல அழித்து
வெற்றி முடி தரித்த விறலோன்

போரியற் கலைக்கே தனி
இலக்கணம் வகுத்த புகழோன்.

தளபதி பால்ராஜ்
களங்கள் இறுகும்போது
தலைவன் காத்திருந்து ஏவும் அம்பு
பலத்தை நிரூபிக்க
களத்தில் குதிக்கும் சண்டைப்புயல்
எந்தப் பொறிக்குள்ளும் சிக்காமல்
பொறிக்குப் பொறிவைக்கும் தீப்பொறி
ஊதியணைக்க முயன்றோரைத்
தோற்கடித்துப்போன வானச்சுடர்
வலைவிரிப்போர் கைகளிற்குள்
வசப்படாமற்போன காற்று.



ஒற்றைக் குரலால் மாற்றானை
ஆற்றாமல் அழ வைக்கும் வலியன்
மூச்சைத் தொலைத்தானே நோயிடம்
பால்ராஜ் என்றிடும்
நிமிர்ந்த நடைச்செருக்கு
களம் நடத்தும் மிடுக்கு
இல்லாமற் போனதே துயர்
கல்லாய்க் கனக்கிறது இதயம்
இருக்கும் போதை விடவும் நீ
இல்லாமற்போன பின்பே தெரிகிறது
உனதருமை.

உன் பூம்பாதங்களின் கீழ்தானே
வயலாய் விளைந்தது பெருவீரம்
நீ வளர்த்த தீ சுமந்த வீரர்
நிற்கின்றார் நின் நினைவேந்தி

பகையும் உலகும் விரைவில் அறியும்
ஒவ்வொரு வீரரும் பால்ராஜ் என்பதை
அன்றும் அதன் பின்பும்
நீ வாழ்வாய் எம்மோடு.





# பிரிகேடியர் பால்ராஜ்

## மீளும் நினைவுகள்

- சாள்ஸ் அன்ரனி சிறப்புப் படையணி சிறப்புத் தளபதி கோபித் -

'எனக்கு பால்ராஜ் அண்ணையை 1991-ம் ஆண்டு ஆகாய கடல் வெளிச் சண்டையின் போதுதான் தெரிந்து இருந்தது. அப்போது நான் அவரை ஒரு போராளியாக இருந்து ஒரு பெரும் படைத்தளபதியாக தூரத்தில் இருந்து பார்த்திருக்கின்றேன். பால்ராஜ் அண்ணையை பார்க்க வேண்டும் என்ற ஆவலோடு இருந்து நீண்டகாலம் காத்திருந்து ஆசையோடு பார்த்திருக்கிறேன். 1995-ம் ஆண்டு சூரியக்கதிர் இராணுவ நடவடிக்கைக்கு பின்னர், நான் சாள்ஸ் அன்ரனி படைக்கு உள்வாங்கப்பட்டபோது நேரடியாக அவரோடு சந்தித்து கதைத்து உறவாடக்கூடிய சந்தர்ப்பம் எனக்கு இருந்தது. சிறிது காலம் அவரோடு நான், அவரது நேரடி வேலைத் திட்டத்துக்காக பணியாற்றியும் இருந்தேன். அவ்வப்போது அவருடைய உள்ளத்திலிருந்து வெளிப்படும்





அந்த இராணுவ ஆற்றல்களை, இராணுவ மதிநுட்பங்களை அவர் விடுதலைக்காக செய்யத்துடிக்கும் போராட்டப் பணிகளையும் பக்கத்தில் இருந்து பார்க்கக்கூடிய சந்தர்ப்பம் எனக்கு நிறையவே கிடைத்திருந்தது. அதில் நான் பங்கெடுத்தும் இருக்கின்றேன். எனக்கு அவர் சொல்லித்தந்த அந்த இராணுவ நுட்பங்கள் என்பது அடுத்தடுத்த காலகட்டங்களில் எனக்கு நன்றாகவே உதவி இருந்தது.

‘சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவை பொறுத்தவரையிலே, பால்ராஜ் அண்ணை அண்ணைக்கு பக்கத்தில் நின்று அதாவது, அவர் அந்தப் படைப்பிரிவை உருவாக்கி இராணுவத் துணைத்தளபதியாக சென்ற பின்னர் அண்ணைக்கு நெருக்கமாக நின்று சண்டைபிடித்து பாரிய இராணுவ வெற்றிகளை ஈட்டி இருந்த வரலாறுகளை நான் படித்திருக்கிறேன். எமது படையணியானது இந்த விடுதலைப் போராட்டத்திற்காக பல சண்டைக்களங்களில் பல வெற்றிகளை ஈட்டிக்கொடுத்திருக்கின்றது. அதற்கு பிரிகேடியர் பால்ராஜ் அண்ணன் அவர்கள் ஏற்படுத்திக்கொடுத்த அடித்தளம், அதாவது அவர் போட்டிருந்த படைக் கட்டுமானம், அவர் வெளிப்படுத்திய அந்தக் கட்டளை, அவரால் உருவாக்கப்பட்ட அந்த அணித்தலைவர்கள் தொடர்ந்தும் செயற்பட்டு வந்தமையினால், தொடர்ந்தும் செயற்பட்டுக்கொண்டு இருக்கின்றமையினால், இன்னும் இன்னும் பல களங்களில் வெற்றிகளை பிரிகேடியர் பால்ராஜ் அண்ணையின் நினைவோடு நாங்கள் பெறுவோம் என்பதில் எந்தவித சந்தேகமும் எங்களுக்கு இல்லை.

இந்த சண்டைக் களத்தில வந்து நாங்கள் அங்க ஒவ்வொரு நேரங்களிலும் சண்டை நடக்கும் போது ஒரு அணி அதாவதுவந்து எங்களுடைய தாக்குதல் அணிகள் ஒன்று காயமடைந்து வீரச்சாவடைந்த இழப்புக்கள் ஊடாக நிரப்பப்படாமல் இருந்து இருக்கும். அது வந்து வெவ்வேறு இராணுவ உபகரணங்கள் அந்த இடத்தில் உடனடியாக கிடைக்கப்படாமல் இருந்திருக்கும். எல்லாத்துக்கும் பொதுவாக அந்த பலவீனங்களை அடைக்கக்கூடிய இல்லாட்டி அந்த பலவீனங்களை நிரப்பக்கூடிய, ஒரு கட்டளை தரக்கூடிய வல்லமையோட பிரிகேடியர் பால்ராஜ் அண்ணை அங்க வந்து இருந்தவர். அந்த பொருட் குறைபாடோ இராணுவ உபகரணக் குறைபாடோ போராளிகள் பற்றாக்குறையோ எங்களுக்கு தெரியவில்லை. ஏனெனில் ஆட்கள் குறையும்போது அதற்கு ஏற்றவாறு ஒரு திட்டத்தை போடுவார்.

ஆட்கள் கூடும்போது அதற்கு மாதிரி ஒரு திட்டத்தை போடுவார். அப்படியாக பல்வேறு பார்வைக்குள்ளாக அதாவதுவந்து பல்வேறு கோணங்களில் இருந்து அவரை பார்க்கின்ற போது ஒரு இராணுவ அதாவதுவந்து, நான் என்னை பொறுத்தவரையில் நான் அறிந்த மட்டத்தில் நான் பார்த்தமட்டத்தில எமது விடுதலைப் போராட்டத்தில் ஒரு இராணுவ விற்பன்னராக ஒரு இராணுவ முன்னணி வல்லவனாக திகழ்ந்த ஒரு தளபதியாக இருக்குமானால் அது பால்ராஜ் அண்ணையாகவே இருக்கும்.

தீச்சுவாலைச் சண்டைக்குரிய திட்டத்தை வகுத்து - விடிய மூவ் பண்ணப்போறம், அதற்கு முதல் அணித் தலைவரைக் கூப்பிட்டு கதைக்கேக்க பால்ராஜ் அண்ணை வந்து ஒரு விடயத்தை எங்களுக்கு சொல்கின்றார், 'ஒன்பது ஒப்பரேசன்களை அதாவது 'கிரி கிரண' ஒன்று தொடக்கம் ஒன்பது ஒப்பரேசனை முடித்திருக்கிறம். இதிலவந்து நாங்கள் இவ்வளவு இழப்புக்களை சந்தித்திருக்கிறம். இப்பவந்து சரியான முறையில திட்டமிடப்பட்ட தலைவரின் ஒரு புதிய தந்திரோபாயத்துக்குள்ளால இந்த பாதுகாப்பு லைனை நாங்கள் அடிச்சிருக்கிறம். அப்ப இதிலவந்து இந்த சண்டையை மாற்றக்கூடிய வல்லமை எங்களிடம் இருக்கு. அதில நீங்கள் நம்பிக்கையோட இருங்கள் நூற்றுக்கு நூறு வீதம் நாங்கள் வெல்லுவம். நீங்கள் 72 மணித்தியாலங்கள் மூர்க்கமாக சண்டையை பிடியுங்கோ' என்று. அப்ப நாங்கள் அதை வந்து ஒரு நகைச்சுவையாக இல்லாட்டி வியக்கத்தக்க விடயமாக பார்க்கிறம். சண்டை முடியுது. 72 மணித்தியாலங்கள் சண்டையை பிடிக்கிறம். அப்ப நாங்கள் நகைச்சுவையாகக் கதைப்போம். 'என்னடா பால்ராஜ் அண்ணை ஆமிக் கொமாண்டர் மாதிரி 72 மணித்தியாலம்தான் தீச்சுவாலை செய்யப்போற ஆள் மாதிரி சொல்கிறார். 72 மணித்தியாலம் சொல்கிறார். அப்படியே நடக்குது. என்னெண்டு இந்தாளுக்கு தெரியும் அது' என்று. ஆனால், நாங்கள் பிறகு பார்க்கிறம், அவர் அதைத்தான் மதிநுட்பமாக திட்டமிட்டிருக்கிறார் என்பதை. எப்படி என்று சொன்னால், மூவ் பண்ணப்போற எதிரிப் படையின் தொகை, எங்களிட்ட இருக்கிற ஆயுத - ஆளணி பலம், இவ்வளவையும் வைத்துக்கொண்டு நாங்கள் கட்டம் கட்டமாக இந்த ஒப்பரேசனை முறியடிக்கின்றது என்று சொன்னால் எங்களுக்கு 72 மணித்தியாலம் தேவை என்பதைத்தான் மனதுக்குள்ள அவர் பதிந்து வைத்திருந்த ஒரு யுக்தியாக நாங்கள் அந்த சண்டை முடிய அதை பார்த்தம். அப்பவும் சொல்கிறார் இந்தச் சண்டைக்குள்ளால பெரிய மாற்றத்தைக் கொண்டு வரலாம். இதில வந்து சந்திரிக்காவா அல்லது பிரபாகரனா என்றதை எல்லோரும் மனதில நிறுத்திக் கொள்ளுங்கோ. நாங்கள் தலைவருக்கு வந்து ஒரு வெற்றிச் செய்தியை அனுப்ப வேணும். அதோட சிறிலங்கா அரசாங்கத்துக்கு இராணுவப் படுதோல்வியை ஏற்படுத்தி பேரிடிக்குள்ள தள்ளவேணும் என்ற வசனத்தை சொன்னவர். அந்த வசனங்கள் அல்லாது போனால் அப்படியே சொல்லப்பட்ட அந்த யுக்திகள் அல்லாது போனால் அப்படியாக உற்சாகப்படுத்தக்கூடிய ஊக்கப்படுத்தக்கூடிய சொற்கள் சண்டைக்களத்தில எங்களை மூர்க்கமாக சண்டையிட வைத்திருக்கிறது.



இப்ப, தொடர்ந்தும் இந்த படைப்பிரிவு, அதாவது சாள்ஸ் அன்ரனி படைப்பிரிவு தொடர்ந்தும் சண்டைக் களங்களில் வந்து சண்டை பிடித்துக்கொண்டு இருக்கும் என்றால் அது அவரின் நீண்ட தூர பார்வைக்குள், அதாவது தலைவரின் திட்டத்துக்கு அமைவாக அந்த படையணி உருவாக்கப்பட்டது - அதற்குச் சரியாக நியமிக்கப்பட்ட பால்ராஜ் அண்ணையின் பணி - அந்தப் படையணிக்கு அவர் காட்டிய வழி - அல்லாவிடின் அன்று அவர் ஏற்படுத்திய போரியல் தந்திரோபாயமான கட்டமைப்பு எல்லாம் ஒருங்கிணைந்து தொடர்ந்தும் இந்த விடுதலைப் போராட்டத்திற்கு இந்த படையணி பாரிய இராணுவ வெற்றியை ஈட்டி ஒரு பெருமையை சேர்க்கும் அல்லது விடுதலையை வென்றெடுக்கும் வரை உறுதியாக உழைக்கும் என பால்ராஜ் அண்ணையின் நினைவை நெஞ்சிலே நிறுத்திக் கேட்டுக்கொள்கின்றேன்.



